# THE ADVENTURES OF G-man





MIND RAIDER

PART 1

மனதைச் சீர்குலைக்கும் கருவி பாகம் - 1

வழங்குபவர்கள்



GOODS CARRIER
गुडस कैरिअर
शुभ
लाभ
HONK!
MH-04 7979
HONK!

அதே வெறிச்சோடிய பார்வை உலகம் முழுவதும்.










க்கான பவர் சப்ளை







மனதை சீர்குலைக்கும் கருவி எதிர்பார்த்ததை விட நன்றாக வேலை செய்கிறது.

டெர்ரோலீனுடைய மெஷீன் குழந்தைகளின் எண்ணங்களையும், மனசாட்சியையும் சக்தியாக மாற்றி டெர்ரோலீனுக்கு முடிவில்லாத ஆயுளைத் தருகிறது.

மேலும் அவனிடம் மற்றவர்கள் மனதை அறியும் சக்தியான நியூரால் இருக்கிறது.
இது கொண்டு குழந்தைகளின் இன்றியமையாத சக்தியை அவனால் கிரகிக்க முடிகிறது.

பிரமாதம் நியூரால்!! சீக்கிரமே நான் என் இழந்த இளமையை மீண்டும் பெறுவேன்.






# NEURAAL





நியூரால் ஒரு காலத்தில் டாக்டர் நாரத் முனாலாக இருந்தான். இவன் ஒரு நம்பிக்கையூட்டும் விஞ்ஞானியாக இந்திய ராணுவத்தில் தொலைத்தகவல் துறையில் பணி செய்தான்.

எண்ணத்தை மாற்றம் செய்யும் ஆராய்ச்சியில் முன்னேறும் பிடிவாதத்துடன் இருந்த இவன் தன் மூளையில் ஒரு டிரான்ஸ்மிட்டரைப் பதித்துக் கொண்டான். இதன் மூலம் மற்றவர்கள் மனதை அறியும் சக்தியை அடக்கி ஆள முயற்சித்தான்.



அவன் பிரமிப்பூட்டும் மன ஆற்றலைப் பெற்றான். மற்றவர்களின் எண்ணங்களைத் திருடுவது. மனசாட்சியை மாற்றுவது, தன்வயப்படுத்துவது, இவையனைத்தையும் சாதித்தான் தன சுயபுத்தியை இழந்த நிலையில். ராணுவம் இவனை கைவிட்டதால் ஒரு மன நோய் பீடிக்கப்பட்டவனாய் இவன் வாழ்ந்தான்.

ஒரு முறை இவனை ஜீ மேனின் ஜீ-படை தோறகடித்தது. அவன் நாடு கடத்தப்பட்டு ஒரு இருட்டறையில் வைக்கப்பட்டான். அங்கு வெளிச்சம், எண்ணங்கள் எதுவும் தப்பித்துச் செல்ல முடியாது.

அந்த இருட்டறை அழிந்து போயிற்றா? அல்லது டெர்ரோலீன் அவனை விடுவித்தானா? எது எப்படியானாலும் நியூரால் திரும்பி வந்து விட்டான், ஜீ-மேனை பழிவாங்க.

மேஜர் சூர்யராஜ்க்கு கவலை உண்டாகிறது










G-man க்கான பவர் சப்ளை

சூர்யராஜ் தனக்குப் பிடித்தமான சக்தியின் ஆகாரமான **பார்லே-ஜீ** பேக்கை சாப்பிடுகிறான்.




ஜீ-மேன் ஆவதற்கு முன் சூர்யராஜ் ஒரு சில விநாடிகளுக்கு சூரியனிலிருந்து ஒளியைப் பெறுகிறான் என்று வரலாறு கூறுகிறது. அதனால் தான் அந்த ஒரு சில விநாடிகளுக்கு உலகத்தில் இருள் சூழ்கிறது. மேலும் இந்த மாற்றத்தை ஏன் ஒருவராலும் பார்க்க முடிவதில்லை.



# PARLE-G POWER SUPPLY




அனைத்து தீமைகளையும் அழிப்பவன்.



ஜீ-மேன் ஒரு தீப்பந்தாக மாறி கிளம்பிச் செல்கிறான்.




க்கான பவர் சப்ளை



அழைப்பில்லாமல் உன் பார்ட்டிக்கு வர எனக்குப் பிடிக்காது. என் அழைப்பை நான் எங்கோ வைச்சுட்டேன்.

பரிதாபம்தான்! பார்ட்டிக்கான சரியான உடையை அதனால் தான் அணியவில்லை போலும்.

ஆனால் உன்னை சந்திப்பதில் எனக்கு எப்போதும் ஆனந்தம்தான். ஜீ-மேன்.



இந்த சமயம்
நீ என்னிக்குமே
திரும்பி வராதபடி
நாடு கடத்திடுறேன்
பாரு...





என்னோட ஒரு பலஹீனத்தை அவன் தெரிஞ்சுகிட்டான். நான் என்னிக்குமே குழந்தைக்கு தீங்கு செய்ய மாட்டேன் என்பதை.

நியூரால் அப்பாவி குழந்தைகளின் மனதைக் கட்டுப்படுத்திக் கொண்டிருக்கிறான். ஜீ-மேனுக்கு எதிராக குழந்தைகளைப் போராட வைக்கிறான்.

இந்த குழந்தைகள் எல்லாம் ரொம்ப கொடூரமா இருக்காங்க.




நியூராலின் குழந்தைப் படையிலிருந்து ஜீ-மேன் தப்பிக்க முடியுமா? டெர்ரோலீனின் தீய திட்டத்தை அவனால் முறியடிக்க முடியுமா? குழந்தைகள் மீண்டும் தங்கள் சுயபுத்தியில் ஆலோசனை செய்ய முடியுமா? மனதை சீர்குலைக்கும் கருவியைப் பற்றி இறுதி இதழில் தெரிந்து கொள்ளுங்கள்.

PARLE

# Fun Center

**cream Biscuits**

What games are the Fun Center sporty characters playing?

Butterscotch

Bourbon

Milk

Strawberry

| | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| G | N | I | L | C | Y | C | C | O | Y |
| I | N | G | F | O | L | C | A | B | E |
| F | O | O | T | B | A | L | L | I | T |
| L | O | P | E | S | T | M | I | N | Z |
| Q | U | G | N | I | T | A | K | S | T |
| L | M | C | N | D | A | G | H | I | B |
| A | C | R | I | C | K | E | T | L | C |
| P | Q | E | S | M | O | C | E | T | E |
| A | S | T | E | R | B | I | N | T | E |
| B | A | S | K | E | T | B | A | L | L |

Unscramble these words to find the new exciting flavours of Parle Fun Center









U B O O R B N

H R T T O B T S U C E C

W R R R S A B Y T E

K I M L

Enlarge the drawing in the space provided below.










O&M 6997

*MRP inclusive of all taxes for net weight 100g.

# பிரார்த்தனை செய்வோம்

தமிழ்ப் புலவர் இளங்கோ அடிகள் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் தான் இயற்றிய சிலப்பதிகாரத்தில் ''கருமுகிலைத் தொடும் அளவிற்கு நெடிதுயர்ந்த மலையளவு சீறியெழுந்த கடல் அலைகள்'' என்று குறிப்பிடுகிறார். ஒருக்கால் அன்று ஏற்பட்டதும் ஒரு சுனாமியோ? அந்த சுனாமியின் பொங்கியெழுந்த கடல் அலைகள்தான் பூம்புகார் நகரத்தை மூழ்கச் செய்ததோ? சுனாமி என்பது ஜப்பானிய மொழியிலிருந்து தோன்றியது. 'சு' என்றால் துறைமுகம். 'னாமி' என்றால் அலைகள். இந்தோனேஷியா, மலேசியா, தாய்லாந்து, மயன்மார், மாலே, ஸ்ரீலங்கா, அந்தமான்-நிகோபார் தீவுகள், இந்தியாவின் கிழக்குக் கடற்கரைப் பகுதிகளான ஒரிஸ்ஸா, ஆந்திரா, தமிழ்நாடு, மேற்குப்பகுதியில் கேரளம் ஆகிய அனைத்துப் பகுதிகளையும் அசுர வேகத்தில் தாக்கிய ராட்சசக் கடல் அலைகள் இரண்டு லட்சம் உயிர்களைக் குடித்ததோடு அல்லாமல், பல ஆயிரக்கணக்கான மக்கள் காணாமல் மறையவும் வீடுகளை இழக்கவும் செய்தது.

ரிக்டர் அலகில் 8.9 அளவில், இந்தோனேஷியாவின் தீவுகளில் ஒன்றான சுமத்ராவில் கடலுக்கு அடியில் தோன்றிய மாபெரும் நிலநடுக்கம் சுனாமியை உண்டாக்க, 1,000 கி.மீட்டர் வேகத்தில் உருவான ராட்சச அலைகள் சுமார் 2,800 கி.மீ தூரம் வரை சென்று பேரழிவை உண்டாக்கியது. அதுவும் டிசம்பர் 26ஆம் தேதி, கிறிஸ்துமஸ் விடுமுறை தினத்தையொட்டி கடற்கரைக்கு உல்லாசப் பயணம் வந்திருந்த கணக்கற்ற பயணிகளையும் கடற்கரையில் வசிக்கும் லட்சக்கணக்கான மீனவர்களையும் சுனாமி அலைகள் இரக்கமின்றி விழுங்கி விட்டன.

லட்சக்கணக்கான மக்கள் தங்கள் உயிரையும் உடைமைகளையும் இழந்த பேரழிவை வார்த்தைகளால் வடிக்க இயலாது. உயிரிழந்தவர்களில் மூன்றில் ஒரு பாகத்தினர் குழந்தைகள் என்பதை அறியும்போது நெஞ்சம் பதைபதைக்கிறது. உயிரிழந்தவர்களை எண்ணிக் கண்ணீர் வடித்துக் கொண்டிராமல் உடைமைகளையும், பெற்றோரையும் உற்றார்களையும் இழந்து உயிருடன் தவிக்கும் லட்சக்கணக்கான மக்களுக்காக நாம் மனதார பிரார்த்தனை செய்வோம். நாம் செய்யும் பிரார்த்தனை அவர்களுக்கு ஒரு நல்ல எதிர்காலத்தை அமைத்துக் கொடுக்கும்.

*-பதிப்பகத்தார்.*



அம்புலிமாமா மதிமுகம் : 109 பிப்ரவரி : 2005 புன்னகை : 02



## பொருளடக்கம்



## சிறப்புப் படைப்பாக

















SUBSCRIPTION

**For USA and Canada**
**Single copy $2**
**Annual subscription $20**

*Remittances in favour of Chandmama India Ltd.*
to
Subscription Division
CHANDAMAMA INDIA LIMITED
**No. 82, Defence Officers Colony Ekkatuthangal, Chennai - 600 097**
**E-mail :**
**subscription@chandamama.org**

**பரிசளிப்புச் சந்தா**

இந்தியாவைத் தவிர மற்ற எல்லா நாடுகளுக்கும் விமானத் தபால் வாயிலாக பனிரெண்டு இதழ்களுக்கு ரூ.900/- இந்தியாவிற்குள் ரூ.144/- **புக்போஸ்டில் உங்கள்** சந்தாத்தொகையை டி.டி வாயிலாகவோ அல்லது மணியாடரிலோ **சந்தமாமா இந்தியா** லிமிடெட் என்ற பெயரை எழுதி அனுப்பவும்.



நிறுவியோர்
பி. நாகிரெட்டி, சக்ரபாணி

# குழந்தைகளின் உரிமைகள்

நவம்பர் 20, 1989ஆம் ஆண்டு உலகிலுள்ள குழந்தைகளுக்கு ஒரு மகத்தான தினமாகும். அன்றுதான் ஐ.நா.வின் பொதுக்குழு உலகிலுள்ள அனைத்துக் குழந்தைகளின் அடிப்படை உரிமைகளை வரையறுத்து முன் மொழிந்தது. பின்னர் 192 நாடுகள் அதற்கு ஒப்புதல் தெரிவித்தன.

முதலாவதாக, ஒவ்வொரு குழந்தைக்கும் ஆரோக்கியமாக வாழ உரிமை உண்டு. தங்களைச் சார்ந்து வாழும் குழந்தைகளின் ஆரோக்கியமான வாழ்க்கைக்கு பெற்றோர்கள் பொறுப்பேற்க வேண்டும்.

அடுத்து வருவது கல்வி. பல நாடுகளில் குழந்தைகளுக்கு இலவசக் கல்வியும், வசதியற்ற குழந்தைகளுக்கு கல்விக்கான உதவிப்பணமும் வழங்கப்படுகின்றன. குழந்தைகள் இடையில் பள்ளிப் படிப்பை நிறுத்தாமல் தடுப்பது, அவர்கள் பயிலும் பள்ளிகளும் ஆசிரியர்களும் பொறுப்பு.

முன்பை விட தற்போது குழந்தைகளுக்கு நடைமுறை வாழ்க்கையைப் பற்றி அறிய வாய்ப்புகள் அதிகம் பெற்றோர்கள் தங்களது பிரச்சினைகளை தங்கள் குழந்தைகளுடன் பகிர்ந்து கொள்ளுதல் அவசியம். குழந்தைகளுக்கும் தங்கள் அபிப்பிராயங்களை வெளியிடவும் உரிமை உள்ளது.

தங்களுடைய உரிமைகளைப் பற்றி அறிந்து கொண்டு அதைக் கோரும் குழந்தைகள், தங்களுடைய கடமைகளைப் பற்றியும் செவ்வனே அறிந்து கொள்ள வேண்டும். பெற்றோர்களுக்கு, தாங்கள் செய்ய வேண்டிய கடமைகளையும் அவர்கள் சீராகச் செய்ய வேண்டும். குழந்தைகளை இவ்வாறு கடமைஉணர்ச்சியும், பொறுப்புணர்ச்சியும் உடையவர்களாக ஆக்கும் இடம் அவர்கள் கல்வி பயிலும் பள்ளியாகத் திகழ வேண்டும்.

ஆசிரியர் : **விஸ்வம்**





## வாசகர்களுக்கானக்
# கதைப் போட்டி (ஆகஸ்ட்)
### தேர்ந்தெடுக்கப் பட்ட
### சிறந்த கதை



''ஐயா என்னிடம் அனுமதி சீட்டு இருந்தும் நான் ஓடி வந்ததற்கு காரணம், என்னுடன் வந்த நண்பன் அனுமதி சீட்டு பெறாததுதான். ஆகவே அவனை காப்பாற்றும் நோக்குடன் உங்கள் கவனத்தை திசை திருப்ப நான் மட்டும் ஓடி வந்தேன். இந்நேரம் என் நண்பன் காட்டை விட்டு வெளியே தப்பித்துச் சென்றிருப்பான்'' என்றான்.

அப்போது காட்டின் ஒரு பகுதியிலிருந்து ''ஐயோ, புலி! புலி!! யாராவது காப்பாற்றுங்கள்! காப்பாற்றுங்கள்!!'' என்று கூக்குரல் கேட்டது. குரல் வந்த திசையை நோக்கி அதிகாரிகளும் விஜயனும் ஓடிச் சென்று பார்த்தனர்.

அங்கு ஒரு புலி மனோகரனை கொல்வதற்காக துரத்தி கொண்டு வந்தது. இதற்குள் அதிகாரிகள் தங்கள் துப்பாக்கியால் வான் நோக்கி சுட்டு புலியை விரட்டினர். தன் உயிரை காப்பாற்றியதற்காக அதிகாரிகளுக்கு நன்றி தெரிவித்தான் மனோகரன்.

அதிகாரிகள், ''பார்த்தீர்களா! நீங்கள் வேட்டையாட வந்த விலங்கினால் சற்று நேரத்தில் நீங்களே வேட்டையாடப் பட்டிருப்பீர்கள். இனி

*தீயவை செய்தார் கெடுதல் நிழல் தன்னை*
*வீயாது அடிஉறைத் தற்று*

எனும் தெய்வப்புலவன் வாக்கை உணர்ந்து செயல்படுங்கள்'' என்றனர்.

மேலும் விலங்குகள் எதையும் நண்பர்கள் இருவரும் வேட்டையாடவில்லை என்பதால் அவர்களை எச்சரித்து விட்டு நண்பனைக் காப்பாற்ற விஜயன் மேற்கொண்ட சமயோசித நடவடிக்கையையும் பாராட்டினர்.

**வி. மணிகண்டன்,** (12ம் வகுப்பு) த/பெ. எஸ். விஸ்வநாதன்
எண் 51, ஜனார்த்தனன் நாயுடு தெரு, கூத்தப்பாக்கம்,
கடலூர் - 607 002.



# அதிசயக் கனவு

லட்சுமிபுரத்தில் சிவராமன் என்ற பணக்கார இளைஞன் வாழ்ந்து வந்தான். சிறு வயதிலேயே பெற்றோர்களை இழந்த அவனை, அவனுடைய அத்தை கண்ணும் கருத்துமாய் வளர்த்து வந்தாள். சிறு வயதிலிருந்தே ஒரு முழுச் சோம்பேறியாயிருந்த சிவராமன், உடல் வணங்கி எந்த வேலையும் செய்வதில்லை.

ஒரு அமாவாசை இரவில், அவன் ஒரு அதிசயமான கனவு கண்டான். அந்த கிராமத்து துர்கையம்மன் கோயிலுக்குமுன் ஒரு தங்க சிம்மா சனத்தில் தான் வீற்றிருப்பது போலவும் தன் தலையில் ஓர் ஆந்தை அமர்ந்திருப்பது போலவும் அவன் கனவு கண்டான். மேலும் அந்தக் கனவில் ஊரார்கள் துர்கை அம்மனுக்குப் பூசை செய்யாமல் அவனுக்குப் பூசை செய்வது போலவும், தூரத்தில் அவனை நோக்கி ஒரு நாய் குலைத்துக் கொண்டு இருப்பது போலவும் கண்டான். சிவராமன் விழித்துக் கொண்டதும் தான் கண்ட அதிசயக் கனவை தன் அத்தையிடம் கூறிவிட்டு விளக்கம் கேட்டான். அத்தை சிரித்துக் கொண்டே, ''சிவராமா, கனவுகள் தேவ ரகசியம் என்பார்கள். அதன் பொருளை நம்மால் புரிந்து கொள்ள முடியாது. நீ வேண்டுமானால் புத்திசாலியான நமது பஞ்சாயத்துத் தலைவர் நாராயணனைக் கேள்'' என்றான்.

அவரிடம் சென்று தன் கனவைப் பற்றிக் கூறி விளக்கம் கேட்டவுடன் அவர், ''உன்னை நீ மிகப் பெரிய மனிதனாக எண்ணிக் கர்வம் கொண்டுள்ளாய். அதனால்தான் இப்படிப்பட்ட கனவு கண்டாய்'' என்று கூற, அந்தப் பதிலினால் சிவராமன் திருப்தி அடையவில்லை. ''பெரியவரே, நான் என்னைப் பெரிய மனிதன் என்று ஒருபோதும் நினைத்த தில்லை. நீங்கள் சொல்வது உண்மை

-செந்தில்குமார்-



யாகவே இருந்தாலும் ஆந்தை என் தலையில் அமர்ந்திருந்தது பற்றியும் நாய் குரைத்ததைப் பற்றியும் உங்கள் விளக்கம் என்ன?'' என்று கேட்டான் சிவராமன். அதற்கு விளக்கம் கூற முடியாத நாராயணன், ''நமது பக்கத்து கிராமத்திலுள்ள ஸ்ரீதர பண்டிதரைப் போய்க் கேள்'' என்றார். பிறகு சிவராமன் அந்தப் பண்டிதரிடம் சென்று தன் கனவுக்கு விளக்கம் கேட்டான். இரண்டு மூன்று முறை சிவராமனது முகத்தை உற்றுப் பார்த்த பிறகு, பண்டிதர் ''உன்னுடைய கிராமத்தில் ஏதோ விபரீதம் நடக்கப் போகிறது. அதனால்தான் மக்கள் அம்மனை விட்டுவிட்டு உன்னைப் பூசை செய்கிற மாதிரி கனவு ஏற்பட்டது. தவிர ''பசியெடுத்ததால் நாய் குலைத்தது. தேவியை மறந்து உன்னை மக்கள் பூசை செய்ததால், ஆந்தை உன் தலையில் உட்கார்ந்தது'' என்றார்.

இந்த விளக்கத்தாலும் திருப்தி அடையாத சிவராமன் பதில் ஏதும் பேசாமல் சலிப்புடன் தன் கிராமத்தை நோக்கித் திரும்பினான். வரும் வழியில் அவன் கிராமத்துக்கு அருகில், ஒரு மரத்தடியில் தாடி மீசையுடன் அமர்ந்திருந்த ஒரு சாமியாரைப் பார்த்தான். அவரை 'கிறுக்கு சாமியார்' என்று கிராமத்தினர் கேலி செய்வதுண்டு. அவர் சிவராமனை நோக்கி, ''என்னப்பா கொஞ்ச நாட்களாக உன்னை இந்தப் பக்கமே காண வில்லையே!'' என்றார்.

சிவராமன் அவரிடம், ''நான் கண்ட ஒரு அதிசயக்கனவைப் பற்றிய

விளக்கம் கேட்க பலரிடமும் சென்று வருகிறேன்'' என்றான். ''யாராலும் சரியாக விளக்கம் கூறியிருக்க முடியாதே!'' என்றார்.

''நீங்கள் சொல்வது சரி'' என்ற சிவராமன், ''உங்களுக்கு எப்படி அதைப் பற்றி தெரியும்?'' என்று கேட்டான்.

''முட்டாளே, கனவுகளுக்கு விளக்கம் தரக்கூடிய ஒரே ஒருவன் நான்தான்'' என்றார். ''அப்படி யானால் நீங்களே சொல்லுங்கள்'' என்ற சிவராமன் தன் கனவைப் பற்றி அவரிடம் விவரித்தான். அதைக் கேட்ட சாமியார் பலமாக சிரித்தார்.

''கேள் மகனே!'' என்று தொடங்கியவர் ''மக்களிடம் தெய்வ பக்தி நாளுக்கு நாள் குறைந்து சுயநலமும், பேராசையும் அதிகரித் துள்ளது. உன்னைப் போன்ற ஒரு சோம்பேரியை அவர்கள் வழிபடு மாறு கனவு தோன்றியது இதையே காட்டுகிறது. தங்க சிம்மாசனத்தில் நீ உட்கார்ந்திருந்தது உன்னுடைய பேராசையையும் கர்வத்தையும் காட்டுகிறது.''

''அப்படியா? நாய் குலைத்ததும் ஆந்தை அமர்ந்ததும் ஏன்?'' என்று சிவராமன் கேட்க, ''உனக்கு வயிறார தினமும் சோறு போடும் உன் அத்தை, ஒரு நாய்க்கு மீதி சோறைப் போடுகிறாள். நீ வேலையற்று சோம்பேரியாகத் திரிந்து வயிறு புடைக்க உண்ணுவதைக் கண்டே, அந்த நாய் உன்னைப் பார்த்து குரைத்தது. ஆந்தை இருட்டில் வசிக்கும் பறவை. அறியாமை என்ற இருளில் மூழ்கிஇருக்கும் உன்னையே தன் இருப்பிடமாக ஆந்தைக் தேர்ந் தெடுத்தது,'' என்றார்.

''ஆகா, ஊரார் உங்களைக் கிறுக்கு என்கின்றனர். ஆனால் உண்மை யிலேயே நீங்கள் தான் அறிவாளி. என் கண்களை இன்று திறந்து விட்டீர்கள்'' என்றான் சிவராமன் நன்றியுடன். ''ஊரே என்னை கிறுக்கு என்று தூற்றும்போது நீ மட்டும் என்னை அறிவாளி என்று எப்படிச் சொல்லலாம்? நான் இனி இந்த கிராமத்தில் இருக்கப் போவ தில்லை'' என்று அந்த கிராமத்தை விட்டுச் செல்லலானார்.





# நல்லவர்களுடன் நட்பு

பூஷணம் கிராமத்திலுள்ள பெரிய விவசாயிகளில் ஒருவன். அவனும், அவனுடைய நான்கு சகோதரர்களும் ஒரே வீட்டில் ஒற்றுமையாக வசித்து வந்தனர். மாலை நேரத்தில் அவர்களுடைய குழந்தைகளும், அயல் வீட்டுக் குழந்தைகளும் சேர்ந்து விளையாடுவது வழக்கம்.

ஒருநாள் மாலை மங்கும் நேரத்தில் பூஷணத்தின் வீட்டு வாசலில் ஒரு வண்டி வந்து நின்றது. குழந்தைகள் விளையாடுவதை நிறுத்திவிட்டு வந்திருப்பது யார் என்று ஆவலுடன் கவனித்தனர். இதற்குள் பூஷணமும் அவனுடைய கடைசி சகோதரனும் வண்டியிலிருந்து இறங்கிய ஒரு வயதான கிழவியை வரவேற்றனர்.

இப்போது அவளை அடையாளம் கண்டு கொண்ட பூஷணத்தின் வீட்டுக் குழந்தைகள், ''பாட்டி வந்து விட்டாள்! பாட்டி வந்து விட்டாள்!!'' என்று அவளைச் சூழ்ந்து கொண்டனர். அந்தக் கிழவி பூஷணத்தின் பெரியம்மா சாவித்திரி ஆவாள். பக்கத்து கிராமத்திலிருக்கும் அவளுக்கு தன் பேரப்பிள்ளைகள் மீது மிகவும் பாசம் உண்டு. அவள் சொல்லும் கதைகளை மிகுந்த ஆர்வத்துடன் குழந்தைகள் கேட்பது உண்டு.

இரவு உணவு உண்டவுடன், எல்லாப் பேரக் குழந்தைகளும் தங்கள் பாட்டியை சுற்றி உட்கார்ந்து கொண்டு கதை கேட்கத் தயாராயினர். பாட்டி பூஷணத்தின் கடைசிக் குழந்தையான கோபியை கவனித்தவள், ''கோபி, உன் கையில் ஏன் கட்டு போட்டு இருக்கிறது?'' என்று கண்டிப்புடன் கேட்டாள்.

கோபி பதில் சொல்வதற்குள் அவனது தாய், ''அம்மா இவன் பள்ளியில் விஷமம் செய்யும் பிள்ளைகளோடு நட்பு வைத்திருக் கிறான். தினமும் ஏதாவது சண்டை

உண்டாக அவர்கள் இவனை அடித்துக் காயப்படுத்தி விடுகி றார்கள்'' என்றாள்.

அவனை மடியில் உட்கார வைத்துக் கொண்ட பாட்டி, அவனை நோக்கி, ''கோபி, நான் சொல்வதைக் கவனமாகக் கேள். நல்ல பிள்ளை களை நண்பர்களாகக் கொள்வதுதான் மிகவும் சிறந்தது. அதைப்பற்றி ஒரு கதை சொல்கிறேன்'' என்று கதை சொல்லத் தொடங்கினாள்.

ராமாபுரம் என்ற கிராமத்தில் பூபதி என்ற தர்மசிந்தனையுள்ள நல்ல மனிதன் ஒருவன் இருந்தான். அவனுக்கு ஸ்ரீதரன் என்று ஒரு பிள்ளை இருந்தான். அவன் தன் அப்பாவைப் போல் மிகவும் தயாள குணம் படைத்தவனாகவும், பண்பு டையவனாகவும் இருந்தான்.

அதே கிராமத்தில் ராஜன் என்ற ஒரு விவசாயி இருந்தான். அவனுடைய பிள்ளை சோமனும் ஸ்ரீதரனும் ஒரே வயதுடையவர்கள். ஆனால் சோமன், ஸ்ரீதரனைப் போல் இல்லாமல் விஷமம் செய்பவனாகவும் போக்கிரி யாகவும் இருந்தான். படிப்பில் மட்டும் கெட்டிக்காரனாக இருந்தான்.

இரண்டு சிறுவர்களுமே ஒரே பள்ளியில் படித்து வந்தனர். ஸ்ரீதரன் சோமனுடன் மிகவும் பிரியத்துடன் நட்புரிமையோடு பழகினாலும், சோமன் அவனிடமிருந்து சற்று விலகியே இருந்தான். சில ஆண்டு களில் இருவருடைய இளநிலை பள்ளிப்படிப்பும் முடிவடைந்தது. ஸ்ரீதரன் ஓர் உயர்நிலைப் பள்ளியில்



சேர அதையறிந்த சோமனின் தகப்பன் ராஜன் ஸ்ரீதரன் போன்ற தங்கமான பிள்ளையோடு தன் மகன் சேர்ந் திருப்பது நல்லது என்று கருதி தன் மகனையும் அதே பள்ளியில் சேர்த்தான். அந்தப் பள்ளியின் நிர்வாகி அந்த கிராமத்து ஜமீன்தார்.

ஒருநாள் சோமன் அதே பள்ளியில் படித்து வந்த ஜமீன்தாரின் மகன் ராஜா மீது ஒரு கல்லைத் தூக்கி எறிந்தான். இதனால் அவன் தலையில் இருந்து ரத்தம் வரத் தொடங்கியது. பள்ளியின் தலைமை ஆசிரியர் உடனே ஒரு மருத்துவரை வரவழைத்து ராஜாவின் காயத்திற்கு சிகிச்சை அளிக்க ஏற்பாடு செய்தார். பிறகு சுற்றிலுமுள்ள மாணவர்களைப் பார்த்து, ''யார் ராஜாவைக் கல்லால் அடித்தவன்?'' என்று கையிலுள்ள பிரம்பை வீசிக்

கொண்டே கோபத்தில் இரைந்து கத்தியவுடன் சோமன் பயந்து நடுங்கத் தொடங்கினான். இதற்குள் சில மாணவர்கள் சோமனைப் பற்றி புகார் செய்து விட்டனர். அதைக் கேட்டு தலைமை ஆசிரியர், ''சோமன் ஸ்ரீதரனின் நண்பன். கண்டிப்பாக அவனால் இந்தக் காரியத்தை செய்திருக்க முடியாது'' என்றார். இதைக் கேட்டதும் தன் தவறை எண்ணி சோமன் விக்கி விக்கி அழத் தொடங்கினான்.

அப்போது ராஜா, ''ஐயா சோமன் ஸ்ரீதரனுக்கு மட்டுமல்ல, எனக்கும் நண்பன்தான். அவன் இப்படிப்பட்ட காரியம் செய்யமாட்டான்'' என்று கூறியதும் சோமனுக்குத் தன் செய்கையைக் குறித்து தன்மீதே வெறுப்பு ஏற்பட்டது. உடனே நேராக தலைமை ஆசிரியரிடம் சென்று ''ஐயா, ராஜாவைக் கல்லால் அடித்தது நான்தான். எனக்கு தண்டனை கொடுங்கள்'' என்று உண்மையை ஒப்புக் கொண்டான்.

உடனே ஸ்ரீதரனும், ராஜாவும் முன் வந்து, ''ஐயா, சோமன் தான் கல்லால் அடித்தவன் என்று தெரியும். இருந்தாலும் தன் செயலை நினைத்து அவன் வருந்துவதைக் கண்டு அவன் செய்யவில்லை என்றோம். அவனை தயவு செய்து மன்னித்து விடுங்கள்'' என்றனர். அவர்களது உயர்ந்த குணத்தைக் கண்டு மகிழ்ந்துபோன தலைமை ஆசிரியர் அவர்கள் இருவரையும் பெருமிதத்துடன் அணைத்துக் கொண்டு சோமனை நோக்கி, ''சோமா, உனக்கு இந்த இரண்டு நல்லிதயம் கொண்டவர் களின் நட்பு கிடைத்திருப்பது நீ செய்த பாக்கியம்'' என்றார்.

இந்த இடத்தில் கதையை நிறுத்திய பாட்டி, ''குழந்தைகளா! நல்லவர்களை நண்பர்களாகக் கொள்வது எவ்வளவு சிறந்தது என்று இப்போது புரிந்து கொண்டீர்களா?'' என்றாள்.

''ஆம், ஆம், புரிந்தது. இனிமேல் நாங்களும் நல்ல பிள்ளைகளையே எங்கள் நண்பர்கள் ஆக்கிக் கொள் வோம்'' என்றனர் அனைவரும்.





# மாய மந்திரவாதி

## 15

*(காளிவர்மன் தன்னுடைய ஆட்களுடன் கோட்டைக்குள் புகுந்தான். மாயக்குரங்கு அவர்களுக்கு ஒரு துண்டித்தத் தலையைக் காட்ட, அது துன்முகனுடையதில்லை என்று தெரிந்து விட்டது. இறுதியில் துன்முகனை சபையில் சிம்மாசனத்தில் வீற்றிருக்கக் கண்டனர். அடுத்த நிமிடம் மாயக்கரடி கையில் கோடாலியுடன் சபைக்குள் நுழைகிறது. அதன் பிறகு…)*

**மா**யக்கரடி பாய்ந்து செல்வதைக் கண்ட காளிவர்மன் அது செய்ய விருக்கும் செயலை ஊகித்துக் கொண்டான். உடனே யானை மீது அமர்ந்திருந்த வேடனைப் பார்த்து ''துன்முகனின் தலையை வெட்டப் போகும் அந்தக் கரடியைத் தடுத்து நிறுத்து'' என்று கத்தினான். பிறகு தானும், ''கரடியாரே! நில்!! துன்முகனை ஒன்றும் செய்து விடாதே'' என்று கத்தினான்.

வேடன் உடனே தன் யானையிலிருந்து குதித்து, கரடியை வழிமறித்து, ''கரடியாரே! காளி வர்மன் சொல்வதைக் கேளுங்கள்!'' என்று கேட்டுக் கொண்டான். ஆனால் கரடி சீற்றத்துடன், ''துன்முகனின் தலையை சீவுமாறு என் குருநாதர் எனக்கிட்ட கட்டளையை மீற மாட்டேன்'' என்றது.

இதற்குள் காளிவர்மன் பாய்ந்து சென்று துன்முகனை அடைந்தான். துன்முகன் தன் கண்களை மூடிய வண்ணம் அமர்ந்திருந்ததைப்



பார்த்து, ''கரடியே! துன்முகனைக் கொல்ல வேண்டிய அவசியம் உனக்கு இருக்காது. ஏனெனில் துன்முகன் இறந்து விட்டான் என்று தோன்றுகிறது'' என்று சந்தேகம் எழுப்பினான்.

''என்ன? கரடி துன்முகனைக் கொன்று விட்டதா?'' என்று கேள்வி எழுப்பிக் கொண்டே மாய மந்திர வாதி அங்கே வந்து சேர்ந்தான். அசைவற்று கண்களை மூடி சாய்ந்திருந்த துன்முகனின் தோளைத் தன் வாளினால் தொட்டு,'' துன்முகா! கண்களைத் திற!! பயப்படத் தேவையில்லை'' என்றான்.

என்ன ஆச்சரியம்! உடனே துன்முகன் கண்கள் திறந்தன. தன் தலையைத் தன் கைகளால் தடவிப் பார்த்துவிட்டு, ''ஆகா! கரடியார் என் தலையை சீவியுங்கூட, தலை அப்படியே இருக்கிறது'' என்று ஆரவாரம் செய்தான். அதைக் கேட்ட அனைவரும் சிரித்தனர்.

அனைவரையும் தன் முன்னே கண்ட துன்முகன் எழுந்து நின்று ''ஆகா! நீங்கள் அனைவரும் இங்குதான் இருக்கிறீர்களா? கேளுங்கள், என்னுடைய ஒரேயொரு ஆசையைக் கேளுங்கள். இந்த சிம்மாசனத்தை ஒருமுறை கைப் பற்றினால் போதும், அப்புறம் என் தலை சீவப்பட்டாலும் எனக்குக் கவலையில்லை'' என்றான்.

காளிவர்மன் தன் கைகளால் துன்முகனின் தோள்களைப் பற்றி அவனை சிம்மாசனத்தில் உட்கார வைத்து விட்டு, ''துன்முகா! நீ இப்போது எங்கள் நண்பனாகி விட்டாய். உன் கோட்டையை அபகரித்த பூபதியும், எங்கள் மந்திர வாதியிடமிருந்து மந்திரக்கோலைக் கைப்பற்றிய அந்த மாயக்குரங்கும் ஒன்று சேர்ந்து விட்டனர். அவர்களை முதலில் நாம் வீழ்த்த வேண்டும்'' என்றான்.

அதைக் கேட்டவுடன் துன்முகன் மகிழ்ச்சியால் துள்ளிக் குதித்தான். உடனே தனது குரலை உயர்த்தி ''கேளுங்கள், உதயகிரியின் மன்னனான நான் ஆணையிடுகிறேன். விசுவாசமுள்ள வீரர்கள் அணி திரளுங்கள்'' என்று கூவினான்.

அடுத்த கணமே, அவனது வீரர்கள் 'திபு' 'திபு'வெனக் குவிந்தனர். ஆனால் அனைவரையும் எண்ணினால் நாற்பது கூடத் தேறவில்லை. ''என்ன துன்முகா! உன்னுடைய படை பலம் இவ்வளவுதானா?'' என்று

காளிவர்மன் ஏளனமாக கேட்டான். அவமானத்தால் முகம் சிவந்த துன்முகன், ''என்னுடைய பகைவனின் பணத்திற்கு ஆசைப்பட்டு பெரும்பாலான வீரர்கள் அவன் பக்கம் சேர்ந்து விட்டார்கள் என்று தோன்றுகிறது'' என்றான்.

காளிவர்மன் மந்திரவாதியின் பக்கம் திரும்பி, ''குரு, இப்போது நீங்கள் என்ன கட்டளை இடுகிறீர்கள்?'' என்று கேட்டான். தீவிர சிந்தனையில் ஆழ்ந்திருந்த மந்திரவாதி மெதுவாகக் காளிவர்மன் பக்கம் திரும்பி, ''காளிவர்மா! என்னுடைய கட்டளை இருக்கட்டும். நீ என்ன செய்ய விரும்புகிறாய் என்பதை முதலில் சொல்'' என்றான். ''குருவே! இது என்ன இப்படிக் கேட்கிறீர்கள்? உங்களுடைய விருப்பம்தான் முக்கியம். என்னுடைய பணிகளை முடித்தவுடன் உங்களுடைய குருவான கரடிபாதர் வசிக்கும் மலைக்குச் சென்று விடுவேன். ஆகவே தங்களுடைய விருப்பத்தைத் தெரிவியுங்கள்'' என்றான்.

இந்த பதிலினால் மகிழ்ச்சி அடைந்த மந்திரவாதி, ''காளிவர்மா! உன்னுடைய குருபக்தி என்னை மெய்சிலிர்க்க வைக்கிறது. என் குருநாதரான கரடிபாதர் ஒரு மாயா ஜாலக்காரனின் செயல்கள் மூலம் ஏராளமான பிரச்சினைகளில் சிக்கி இருக்கிறார். அவரைச் சுற்றிலும் பல நெருக்கடிகளும் அபாயங்களும் சூழ்ந்துள்ளன. அவருக்கு உன்னைப் போன்ற ஒரு துணிச்சல்கார வாலிபனின் உதவி தேவை அவற்றுக்



கெல்லாம் பிரதிபலனாக உனக்கு என்ன வேண்டுமோ, அதை நீ தயங்காமல் கேட்கலாம்'' என்றார்.

அதைக் கேட்ட காளிவர்மன் கொஞ்சம் யோசித்தான். பிறகு, ''குரு, நான் என்ன கேட்க வேண்டும் என்பதைப் பற்றி பிறகு யோசிக்கலாம். அன்று ஜிதகேது எனக்கு மரணதண்டனை விதித்தபோது என்னைக் காப்பாற்றி எனக்குப் பேருதவி புரிந்தவர் நீங்கள் அதற்குக் கைம்மாறாக நான்தான் உங்களுக்கு நிறைய செய்ய வேண்டும். ஆகவே இப்போது நீங்களே கட்டளை இடுங்கள்'' என்றான்.

''அப்படியானால் பிரம்மபுத்திரா நதி உற்பத்தியாகும் கரடி மலைக்கு என்னுடன் நீ வர வேண்டும்'' என்றான் மந்திரவாதி.

''உங்கள் கட்டளைக்குக் கீழ்படிகிறேன்'' என்றான்.



இந்த வார்த்தைகளைக் கேட்டதும் துன்முகன் பயத்தால் நடுங்கிக் கொண்டே, ''மந்திரவாதி அவர்களே! பிறகு என் கதி என்னாகும்? நாற்பது வீரர்களை வைத்துக் கொண்டு என்னால் என்ன செய்ய முடியும்? அப்படியானால் நானும் உங்களுடன் வந்து விடுகிறேன்'' என்றான்.

இதற்குள் கரடி மிகுந்த ஏமாற்றத்துடன், ''குருவே! என்னை மறந்து விட்டீர்களா? நீங்கள் எல்லாம் என்னை விட்டுச் சென்று விட்டால், ஜிதகேதுவின் ஆட்கள் என்னைப் பிடித்துச் சென்று அவன் முன் நிறுத்துவார்கள். அவர் ஆணையை மீறியதற்காக எனக்குக் கடும் தண்டனை கிடைக்கும். அதைக் காட்டிலும், நானும் உங்களுடன் வருவதே சரியாக இருக்கும்'' என்றது.

அதைக் கேட்ட மந்திரவாதி புன்னகையுடன் கரடியின் தோளில் கையை வைத்து ''பயப்படாதே! நான் உன்னையும் துன்முகனையும் மறந்து விடவில்லை. உங்கள் இருவரின் பாதுகாப்புக்கு ஏற்பாடு செய்தபிறகே நான் இந்த இடத்தைவிட்டுக் கிளம்புவேன். சந்திரசிலா நகரத்து மன்னனான ஜிதகேது காளிவர்மனை மட்டுமின்றி என்னையும் அவமானப் படுத்திஉள்ளான். அவனுடைய அழிவு எங்கள் கையில் தான் இருக்கிறது'' என்றான்.

''ஜிதகேதுவின் மந்திரியான ஜீவகுப்தன் தனது வீரர்களுடன் கோட்டைக்கு வெளியே இருக்கிறான். அவன் நம்மீது திடீரெனப் படை எடுத்தால் உக்கிரதண்டன் அவர்களை சமாளிப்பான். இப்போது நம்மை எதிர் கொண்டுள்ள பிரச்சினை இந்த பூபதியும் மாயக் குரங்கும் எங்கு ஒளிந்து கொண்டிருக்கிறார்கள் என்பதே!'' என்றான் காளிவர்மன்.

காளிவர்மனின் வார்த்தைகளைக் கேட்டவுடன், கோடாலியைத் தூக்கித் தனது தோளில் சாய்த்துக் கொண்ட மாயக்கரடி, ''காளிவர்மரே! நான் யானையின் மீதேறி கோட்டைக்கு வெளியே செல்கிறேன். உக்கிரதண்டனுக்கு உதவியாக இருப்பேன். எங்கள் இருவரையும் கண்ட மாத்திரத்திலேயே, ஜீவகுப்தன் தன் படைகளுடன் வாலைச் சுருட்டிக் கொண்டு ஓடி விடுவான்'' என்று வீர முழக்கம் செய்தது.

''நீ சொல்வதும் சரிதான் நாங்கள் அதற்குள் இங்கே அந்த பூபதியையும் குரங்கையும் தேடுகிறோம்'' என்றான்

காளிவர்மன். ''சரி சரி! அடேய் வேடா! யானையைக் கோட்டைக்கு வெளியே கொண்டு செல்'' என்று கூறி கரடி யானையின் மீது அமர்ந்தது.

தீவிர யோசனையில் ஆழ்ந்திருந்த துன்முகன், ''குருவே! குறைவான வீரர்களை வைத்துக் கொண்டு நான் எப்படி பூபதியுடன் போரிடுவேன்? பேசாமல் நானும் உங்களுடன் வந்து விடுகிறேன்'' என்றான்.

மாயக்குரங்கையும், பூபதியையும் தேடும் வேலையை துன்முகனின் விசுவாசமுள்ள வீரர்களிடம் ஒப்படைத்து விட்டு, மந்திரவாதியும் காளிவர்மனும் வெளியே செல்லத் தயாரான போது, திடீரென ஒரு குரல் ஒலித்தது. மதில் சுவர் மீது நின்று கொண்டிருந்த துன்முகனின் மெய்க்காப்பாளன் முக்தகண்டன், ''மகாராஜா, நமது எதிரி பூபதியும் அந்த மாயக்குரங்கும் ஜிதகேதுவின் அருகில் உள்ளனர். அவர்கள் யாவரும் உக்கிரதண்டனுடன் பேசிக் கொண்டிருக்கின்றனர்,'' என்று உரத்த குரலில் கூவினான்.

''குரு, இப்படி ஏதாவது நடக்கும் என்று ஆரம்பத்திலேயே நான் நினைத்தேன். நாம் நம்முடைய வீரர்கள் சிலரை வெளியில் நிறுத்தி இருக்க வேண்டும். அந்தக் கயவர்கள் உக்கிரதண்டனைத் தன்வசம் இழுக்க முயல்கின்றனர்'' என்றான் காளி வர்மன் படபடப்பாக.

''என்னிடம் ஏதோ பெரிய ஆதாயத்தை நாடுகிற உக்கிரதண்டன், அவர்களுடன் சேர மாட்டான். வாருங்கள் செல்வோம்'' என்றான்



மந்திரவாதி. காளிவர்மன் சந்தேகப் பட்டது மாதிரியேதான் சம்பவங்கள் நிகழ்ந்திருந்தன. மாயக்குரங்கின் வடிவில் இருந்த பிராந்திமதியும், ஜிதகேதுவும் சேர்ந்து உக்கிர தண்டனின் மனதை ஆசை காட்டி மாற்ற முயற்சித்துக் கொண்டு இருந்தனர்.

ஆனால் உக்கிரதண்டன் தன் கதையை உயர்த்திக் கொண்டே, ''உங்களுடைய ஆசை வார்த்தை களுக்கு நான் மயங்க மாட்டேன். கரடி மலையில் என் நண்பன் ஒருவன் சிக்கியுள்ளான். அவனை மீட்பதே இப்போது என்னுடைய லட்சியம்'' என்றான்.

ஆனால் மாயக்குரங்கு தொடர்ந்து தன் ஜால வேலையைக் காட்டியது. ''உக்கிரதண்டா! எந்த நண்பனை மீட்பது உன் லட்சியமோ அதை நீ அடைய முடியாது. ஏனெனில் என்

குரு அவனை அழித்து விட்டார். ஆகவே மந்திரவாதியால் உனக்கு ஒரு லாபமுமில்லை'' என்றது.

''என்ன? அவன் கொல்லப் பட்டானா? நீ சொல்வது உண்மையா?'' என்று கர்ஜித்த உக்கிர தண்டனை சமாதானப் படுத்தும் முயற்சியில் ஜீவகுப்தன், ''உக்கிர தண்டா! நடந்தது நடந்து விட்டது. அதை மறந்து விடு. நீ எங்களுடன் சேர்வதால் எங்கள் நாட்டிலும் ஒரு வலிமைமிக்க ராட்சசன் இருக்கிறான் என்று நாங்கள் கர்வப்பட முடியும். நீயும் எங்களுடைய மன்னரின் ஆதரவில் நிம்மதியாகக் காலம் கழிக்க முடியும்'' என்றான்.

''ஓகோ! அப்படியானால் என்னிட மிருந்து எந்த உதவியையும் எதிர் பார்க்காமலேயே, எனக்கு ஆதரவு அளிக்கத் தயாராக இருக்கிறீர்களா?'' என்று கேட்டான் உக்கிர தண்டன்.

''நாங்கள் இப்போது அந்தக் கோட்டைக்குள் நுழையப் போகிறோம். கோட்டைக்குள் மாய மந்திரவாதி, காளிவர்மன் என்ற இரண்டு குற்றவாளிகள் இருக் கின்றனர். அவர்களுடன் துன்முகனும் இருக்கிறான். இந்த மூவரையும் அழிப்பதில் எங்களுக்கு உதவினால் போதும்'' என்றான் ஜீவகுப்தன்.

இதற்கு உக்கிரதண்டன் பதில் அளிப்பதற்குள் கோட்டைக்குள் இருந்து மந்திரவாதியும் மற்றவர்களும் வெளியே வந்தனர். அவர்கள் அனை வரையும் சேர்ந்தாற்போல் பார்த்ததும், முதலில் ஜீவகுப்தன் பயந்து போனான். என்ன செய்வது என்ற கேள்விக்குறியுடன் பூபதியின் பக்கம் திரும்பினான்.

அப்போது உக்கிரதண்டன் தனது கர்ஜிக்கும் குரலில் ''மந்திரி, என்னுடைய உதவி வேண்டும் அல்லவா? இதோ என் உதவி'' என்று சத்தமாக கூவிக் கொண்டே, தன் கதையை மாயக்குரங்கின் மீது வீசி எறிந்தான்.

குரங்கு 'கீச்' 'கீச்' என்று கத்திக் கொண்டு உயரத் தாவியது. உக்கிரதண்டனின் கதை குரங்கு அமர்ந்திருந்த குதிரையின் மேல் போய்ப் பட்டது.

*(தொடரும்)*





நவீன வேதாளக் கதை

# காவல் பூதம்

தன் முயற்சியில் சற்றும் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மேல் ஏறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின் கீழ் இறங்கி அவன் அதை சுமந்து கொண்டு மயானத்தை நோக்கிச் செல்லுகையில் அதனுள்ளிருந்த வேதாளம் எள்ளி நகைத்து, ''மன்னா, உன் விடா முயற்சியைப் பார்த்தால் யாரோ சாது சந்நியாசிகள் சொன்னதைக் கேட்டு அதை முற்றிலும் நம்பி, அதை நிறைவேற்ற இவ்வாறு இரவும் பகலும் பாடுபடுகிறாயோ என்று சில சமயங்களில் தோன்றுகிறது. இப்படிப்பட்ட யோகிகள் சொல்லும் வார்த்தைகளின் உட்கருத்து என்னவென்று புரியாமல்



தனது அழிவைத் தானே தேடிக் கொண்ட தேவநாதன் விஜயன் ஆகியோருடைய கதையைக் கூறுகிறேன். கவனமாகக் கேள்'' என்று வேதாளம் கதை சொல்ல லாயிற்று.

பல ஆண்டுகளுக்கு முன், சுதர்சனம் என்ற ஒரு பணக்கார வியாபாரி இருந்தான். தனது திரண்ட செல்வத்தையெல்லாம் ஒரு கருவூலத்தில் பாதுகாப்பாக வைத்து, அதைக் காவல் காக்க தன் மனைவியின் தூரத்து உறவினனான விஜயனை நியமித்தான். அவன் நேர்மையாகப் பணி புரிகிறானா என்பதை அறிய அவன் மீது ஒரு கண் வைத்திருந்தான். இதைப்பற்றி அறியாத விஜயன், தினமும் தான் காவல் காக்கும் கருவூலத்திலிருந்தே சில பொற்காசுகளைத் திருடி வந்தான்.

சுதர்சனம் அதைப்பற்றி தன் மனைவியிடம் கூறினான். விஜயனை உடனே கண்டிக்கத் துடித்த மனைவியை சுதர்சனம் தடுத்து ''நமது ஏராளமான செல்வத்தை நாமே தனியாகப் பாதுகாப்பது மிகவும் கடினம். வேறொரு நேர்மையான மனிதனைத் தேடுவதும் கடினம். அதற்கு பதில் விஜயனே அந்தப் பணியைத் தொடர்ந்து செய்யட்டும். நான் விஜயனைக் கண்காணித்துக் கொண்டேயிருக்கிறேன்'' என்றான்.

விஜயன் தொடர்ந்து கஜானாவில் இருந்து பொற்காசுகளைத் திருடிக் கொண்டேயிருந்தான். நாளடைவில் அவன் இவ்வாறு திருடிச் சேர்த்த வற்றை இரு பானைகளில் நிரப்பி, கஜானா அறையின் பின்புறமுள்ள தோட்டத்தில் குழி தோண்டிப் புதைத்து வைத்து விட்டான். இந்தச் செய்கையும் சுதர்சனத்தின் கண் பார்வையிலிருந்து தப்பவில்லை. இனிமேலும் பொறுக்கக் கூடாது என்று கருதிய சுதர்சனம். விஜயனைக் கூப்பிட்டு கடுமையாகச் சாடினான். ''நீ என் மனைவியுடைய உறவினன் என்பதால் உன்னிடம் இந்த வேலையை ஒப்படைத்தேன். ஆனால் நீ செல்வத்தை திருடி, அதைப் பானைகளில் நிரப்பி தோட்டத்தில் புதைத்து வைத்திருக் கிறாய். உனக்கு என்ன தண்டனை விதிக்கலாம் என்று நீயே சொல்'' என்று கோபித்துக் கொண்டான்.

தனது திருட்டு வெளியானதால் விஜயன் பயந்து நடுங்கினான். உடனே தன் எசமானரின் கால்களில் விழுந்து, ''நான் பெரிய தவறு செய்து விட்டேன். என்னை மன்னித்து விடுங்கள் என்று கெஞ்சினான்.

உடனேசுதர்சனம், ''உன்னை நான் மன்னித்து விடுகிறேன்'' நீ திருடிய செல்வத்தையும் உனக்கே அளித்து விடுகிறேன். ஆனால் உன்னுடைய பணியின் நேர்மையையும் திறமை யையும் சோதிக்க ஒரு சவால் விடுகிறேன். நீ பதுக்கி வைத் திருக்கும் என் பணத்தை நானே ஒரு வாரத்திற்குள் உனக்குத் தெரியாமல் திருடப் போகிறேன். உனது திறமையால் நான் திருடுவதைத் தடுத்து நிறுத்த முடியுமா பார். நீ தோற்றால், உன்னைக் கைது செய்து சிறையில் அடைக்கச் செய்வேன்'' என்றான் சுதர்சனம்.

இந்த விஷயத்தை அறிந்த சுதர்சனத்தின் மனைவி, ''அப்போதே அவனைக் கையும் களவுமாகப் பிடித்துஇருக்கலாம். அவன் இரண்டு பானை நிறைய திருடியவற்றை சேர்க்கும் வரை ஏன் விட்டு வைத்தீர்கள்?''

''அப்படியில்லை. இப்போது இரண்டு பானை நிறைய பணம் திருடி விட்டான். அதை நான் திருடாமல் பாதுகாத்தால் அது அவனுக்கே சொந்தம் என்று ஆசை காட்டி உள்ளேன். ஆகவே இத்தனைப் பணத்தைப் பாதுகாக்க வேண்டி யாவது, இனிமேல் ஒழுங்காகப் பணியில் ஈடுபடுவான் என்று நினைக்கிறேன்'' என்றான் சுதர்சனம்.



இதற்குள் நடந்த விஷயத்தைத் தன் மனைவியிடம் தெரிவித்த விஜயன், அவருடைய ஆலோசனையை நாடினான். அவள், ''நமது கிராமத்து எல்லையில் உள்ள மலைக்குகையில் ஒரு சாமியார் இருக்கிறார். அவர் உதவியை நாடினால், இந்தப் பிரச்சினை தீரும்'' என்றாள்.

உடனே விஜயனும் சாமியாரை சந்தித்து நடந்த விஷயங்களைக் கூறி யோசனை கேட்டான். அதற்கு அந்த சாமியார். ''உனக்கு மந்திர விபூதி தருகிறேன். அதை அந்தப் பானைகள் புதைக்கப்பட்டுள்ள இடத்தில் தூவினால் அதன் பிறகு ஒரு வாரத்திற்கு அதை யாராலும் எடுக்க முடியாது. ஆனால் சுதர்சனத்தின்



செல்வத்தை நீ இவ்வாறு ஒளித்து வைப்பதால் அந்தக் கொடிய பாவம் உன்னை வருத்தும். எது சரியென்று உனக்குத் தோன்றுகிறதோ, அதைச் செய்'' என்றார்.

அப்போதைக்கு அந்த செல்வத்தையும் அடைந்து, தன் வேலையும் தொடர்ந்தாலே போதும் என்று எண்ணிய விஜயன், பாவத்தைப் பற்றி அக்கறை கொள்ளவில்லை. சாமியார் தந்த மந்திர விபூதியை வாங்கிச் சென்று பானைகள் புதைக்கப் பட்டிருந்த இடத்தில் தூவினான். இதனால் சுதர்சனத்தால் ஒரு வாரத்திற்குள் அந்தப் பானைகளையும் அவற்றிலுள்ள தன் பொற்காசுகளையும் எடுக்க முடியாமல் போயிற்று. ஒரு வாரமும் கழிந்து விட்டது. சுதர்சனம் தன் நிபந்தனையில் தோல்வியுற்றான். ஆனால் விஜயன் உடல் எங்கும் எட்டாவது நாளே எரிச்சல் மூண்டது. பயந்து போன அவன் மீண்டும் அதே சாமியாரிடம் சென்றான்.

சாமியார் அவன் உடல் எரிச்சலைப் பற்றி அறிந்ததும், ''அந்த நல்ல மனிதனின் செல்வத்தை நய வஞ்சகமாகத் திருடியதால் ஏற்பட்ட பாவம் உன்னை இப்போது பீடித்துள்ளது. ஆனால் இந்த எரிச்சலில் இருந்து விடுபடவேண்டுமானால் ஒரு பூதமாக மாறி அந்தப் புதையலைக் காத்து வா. இந்த ரகசியம் உன் மனைவிக்குக் கூடத் தெரிய வேண்டாம்'' என்றார்.

தனது உடல் எரிச்சலைத் தாங்க முடியாத விஜயன் பூதமாக மாறுவதே மேல் என்று நினைத்தான். சாமியாரிடம், ''சுவாமி நான் பூதமாக எத்தனைகாலம் இருக்க வேண்டும்?'' என்று கேட்டான்.

''இது உன்னுடைய தவறான செயலால் நிகழ்ந்தது. உன்னுடைய செய்கைக்காக இதை நீ அனுபவித்தேயாக வேண்டும். உன்னுடைய பொறுப்பை ஏற்க மற்றொரு பூதம் வந்தால், நீ சுய உருவம் பெறுவாய்'' என்றார் சாமியார். வேறு வழியின்றி விஜயன் பூதமாக மாறினான். விஜயனின் மனைவி அந்தப் புதையலைத் தானே எடுத்துக் கொள்ள முயற்சித்தபோது ஒரு பூதம் அவளை பயமுறுத்த அவள் ஓடியே விட்டாள். அந்த பூதம் தன் கணவன் தான் என்று அவளுக்குத் தெரியவில்லை.



விஜயனைக் காணாத அவன் மனைவி அந்த ஊரை விட்டேச் சென்று விட்டாள். ஆனால் சுதர்சனம் விஜயன் பணத்தோடு தலை மறைவாகி விட்டதாக எண்ணிக் கொண்டிருந்தான்.

பல ஆண்டுகள் கழிந்தன. அந்த கஜானா இருந்த இடம் மாறி விட்டது. அந்த இடத்தில் வேறு வீடு உருவாகி, அங்கு தேவநாதன் என்பவன் தன் குடும்பத்தினருடன் வசிக்கத் தொடங்கினான். தேவநாதன் ஒரு கஞ்சன். செலவாகுமே என்பதற்காகத் தன் பெண்ணுக்குத் திருமணம் செய்யாமலே காலம் கழித்தான். அவன் கஞ்சத்தனத்தைப் பொறுக்காத மகன் வீட்டை விட்டுப் போய்விட, அவன் மகள் தானே திருமணம் செய்து கொண்டு சென்றுவிட, அவன் மனைவி இறந்துவிட, தேவநாதன் தனி மனிதனான்.

ஒரு நாள் தனக்கு இலவசமாகக் கிடைத்த ஒரு மாம்பழத்தைத் தின்றுவிட்டு, அதன் கொட்டையை தன் தோட்டத்தில் நட்டு வைக்க குழி தோண்டுகையில், பூமியில் இரு பானைகள் இருப்பதையும் அவற்றில் பொற்காசுகள் இருப்பதையும் கண்ட தேவநாதன் மகிழ்ச்சியில் பைத்தியம் பிடிக்கும் நிலையை எய்தினான். ஆனால் அவற்றை எடுக்க முயற் சித்ததும் திடீரென ஒரு பூதம் அவன் முன் தோன்றி பயமுறுத்தியது. பூதத்தைக் கண்ட தேவநாதன் சிறிதும் பயப்படவில்லை. அந்தச் செல்வம் தனக்கே சொந்தம் என்று பூதத்துடன் வாதம் புரியத் தொடங்கினான். உடனே விஜயனாகிய பூதம் அந்தப் புதையலின் கதையைக் கூறி, அந்தப் புதையலுக்கு சொந்தம் கொண்டாட விரும்பினால், தன்னைப்போல் பூதமாக மாறவேண்டும் என்றும், அதற்கு குகைக்குள் வசிக்கும் சாமியாரைக் காண வேண்டும் என்று சொன்னது.

புதையல் கிடைத்தால் போதும், பூதமானாலும் பரவாயில்லை என்று எண்ணிய தேவநாதன் அந்த சாமியாரை அடைந்தான். தேவநாதனின் பேராசையைக் கண்ட சாமியார், ''பூதமானாலும் பரவா யில்லை, புதையல் வேண்டும் என்று நினைக்கும் உன் எண்ணம் நிறைவேறும். போய்வா'' என்றார். விஜயனாகிய பூதத்திடம் தான்

பூதமாக மாறுவதாகவும் சாமியாரின் ஆசீர்வாதத்துடன் வந்திருப்பதாகவும் தெரிவித்தான். உடனே பூதம் அந்தப் பானைகளை தேவநாதனிடம் ஒப்படைத்தது. கொஞ்சம் கொஞ்சமாக பூதம் விஜயனாக உருமாறியது. பொற்காசுகள் அனைத்தும் தனக்கே சொந்தம் என்ற மகிழ்ச்சியில் குதித்த தேவநாதன் திடீரெனத் தடுமாறி கீழே விழுந்து உயிர் துறந்தான்.

கதையை இந்த இடத்தில் நிறுத்திய வேதாளம் விக்கிரமனை நோக்கி, ''மன்னா, அந்த சாமியார் செய்த காரியத்தைப் பார்த்தாயா? தேவநாதன் அவரிடம் சென்று அந்தப் புதையல் தனக்கு சொந்தமாக வேண்டும் என்று கெஞ்சிய போது உன் எண்ணம் நிறைவேறும் என்று சொன்னார் அல்லவா? ஏன் அதன்படி நடக்கவில்லை? தேவநாதன் ஏன் இறந்து போனான்? சாமியார் சொன்னதில் ஏதாவது உட்பொருள் இருந்ததா? என் சந்தேகங்களுக்கு விளக்கம் தெரிந்திருந்தும், நீ மௌனமாக இருந்தால் உன் தலை வெடித்துச் சுக்கு நூறாகும்'' என்றது.

அதற்கு விக்கிரமன், ''தேவநாதன் மனித நேயமே துளிக்கூட இல்லாத அரக்கன். பணம் செலவாகுமே என்று தன் மகளுக்குத் திருமணமே செய்யாத கஞ்சன். தன் குடும்பத்தினர் அனைவரையும் இழந்தும் பணத்தின் மேலுள்ள ஆசை அவனுக்கு நீங்கவில்லை. புதையலைத் தனதாக்கிக் கொள்ள வேண்டும் என்ற பேராசை அவனைக் குருடனாக்கியது. பிறருடைய செல்வம் விஷம் போன்றது என்பதை உணராத தேவநாதன் புதையலை அடைவதை குறிக்கோளாக கொண்டிருந்தான். அதற்காக அவன் பூதமாகக் கூட மாறத் தயாரானான். அவ்வாறு புதையல் ஒன்றையே குறியாகக் கொண்ட தேவநாதனிடம் ''உன் எண்ணம் நிறைவேறும்'' என்று சாமியார் சொன்னது சரியே. அதில் தவறு எதுவுமில்லை, உட்பொருளும் இல்லை'' என்றான்.

விக்கிரமனின் இந்த சரியான பதிலால் அவனுடைய மௌனம் கலையவே, அவன் சுமந்து வந்த உடலோடு வேதாளம் மீண்டும் முருங்கை மரம் ஏறிக் கொண்டது.






## மகாத்மா காந்திக்கு ஒரு கோயில்



இந்தியர்கள் அனைவரும் மகாத்மா காந்தியைத் தங்கள் தேசத் தந்தையாக மதித்துப் போற்றுகின்றனர். ஆனால் ஒரிசா மாநிலத்திலுள்ள சம்பல்பூரில் மக்கள் அவரை தெய்வமாக மதித்து ஒரு கோயிலே கட்டிஇருக்கின்றனர். அங்கு அவருடைய வெண்கலத்தாலான உருவச் சிலைக்கு ஒவ்வொரு நாள் காலையும், மாலையும் வழிபாடுகள் நடை பெறுகின்றன. அங்கு கூடும் மக்கள் காந்தியின் மாலைப் பொதுக் கூட்டங்களில் இசைக்கப்பட்டு வந்த தேசபக்திப் பாடல்களை மனமுருகிப் பாடுகின்றனர். குடியரசுதினம் (ஜனவரி 26), தியாகிகள் தினம் (ஜனவரி 30), காந்தி ஜெயந்தி (அக்டோபர் 2) ஆகிய விசேஷ நாட்களில், ஏராளமான மக்கள் கூட்டம் கூடுவதைக் காணலாம்.

## சமண மதகுருக்களும், சிலைகளின் பீடங்களும்



வர்த்தமான மகாவீரர் சமண மதத்தைத் தோற்றுவித்தவர் என்று கருதினாலும், உண்மையில் அவருடைய காலத்திற்கு முன்னமே அது தோற்றுவிக்கப்பட்டு விட்டது. மகாவீரருக்கு முன், 23 மதகுருக்கள் இருந்துள்ளனர். மகாவீரர்தான் தீர்த்தங்கரர் என்று அழைக்கப்படும் கடைசி குரு. ஆனால் எல்லா குருக்களின் சிலைகளும் ஒன்று போல் அமைந்துள்ளன. அவர்களுள் யார் எவர் என்பது அந்தச் சிலைகளின் பீடத்தின் நடுப்பகுதியில் பொறிக்கப்பட்ட சின்னத்தைக் கொண்டு மட்டுமே அறிய முடியும்.

அயல் நாட்டுக் கதைகள் (போலந்து)

# ர்ராஜ்ராவுக்குக் கழுகு மூக்கு

"அதோ அந்தத் தோட்டத்தில் தான் விளாடிமிரின் அதிசய ஆப்பிள் மரம் இருந்தது. இன்றும் இருந்தால் எவ்வளவு நன்றாயிருக்கும்?" என்று கூறி போலந்து மக்கள் நூறு ஆண்டுகளுக்கு முன் வரையில் பெருமூச்சு விடுவதுண்டு. இன்று அந்தத் தோட்டம் இருந்த இடத்தில் வீடுகள்தான் உள்ளன. தோட்டமும் ஆப்பிள் மரமும் இல்லாவிடினும் அந்த அதிசய ஆப்பிள் மரத்தைப் பற்றிய கதை இன்றும் அந்த நாட்டு மக்களுக்கு நினைவிருக்கிறது.



ஒருமுறை விளாடிமிரின் தாயிடம் ஒரு யோகி, "உனக்கு ஓர் அபூர்வக் குழந்தை பிறக்கும். அவன் பணக்காரனாகவோ மகிழ்ச்சியாகவோ இருப்பது உன் விருப்பத்தைப் பொறுத்தது" என்று ஆசீர்வாதம் செய்தார். ஆனால் வாழ்வில் மனிதனுக்கு மகிழ்ச்சிதான் முக்கியம் என்று கருதிய அவள் தன் மகன் மகிழ்ச்சியாக இருக்க வேண்டும் என்றே வரம் கேட்டாள்.

சிறிது காலத்தில் தனக்குப் பிறந்த குழந்தைக்கு விளாடிமிர் என்று பெயரிட்டு அன்புடன் வளர்த்து வந்தாள். பள்ளிக்கு அனுப்ப பண வசதி இல்லாததால், அவள் தன் மகனை ஒரு செருப்பு தைக்கும் தொழிலாளியிடம் வேலைக்கு அமர்த்தினாள். ஆனால் சில நாட்களிலேயே விளாடிமிர் அந்த வேலை பிடிக்காமல் திரும்பி விட்டான். பணக்காரர்கள் மட்டுமே செருப்பு தைத்துக் கொள்கிறார்கள் என்றும், ஏழைகளுக்கு செருப்பு வாங்கப் பணம் இல்லையென்றும், ஏழைகளுக்குப் பயன்படாத தொழில் தனக்குத் தேவையில்லை என்றும் விளாடிமிர் தாயிடம்



கூறினான். அவனுடைய வார்த்தைகளில் இருந்த நியாயத்தை உணர்ந்த அவனது தாய் பிறகு விளாடிமிரை ஒரு தையற்காரரிடம் வேலைக்கு அமர்த்தினாள். ஆனால் முன்பு கூறிய அதே காரணத்தினால் அந்த வேலையிலிருந்தும் நின்று விட்டான்.

விளாடிமிரின் தாய் அவனை இப்போது வாட்கள் தயாரிக்கும் பட்டறையில் பணிக்கு அமர்த்தினாள். ஆனால் ''மனிதர்களைக் கொல்லப் பயன்படும் வாட்களைத் தயாரிக்க நான் விரும்பவில்லை'' என்று கூறி அந்த வேலையையும் விட்டு விட்டான்.

அவன் தாய், ''இவ்வாறு ஒவ்வொரு வேலையையும் நீ புறக்கணித்தால், உன்னை எந்த வேலையில் அமர்த்துவது என்றே எனக்குத் தெரியவில்லை. நீ இனி ஆடு மேய்க்கும் பணியில் ஈடுபடுவாய். அதுதான் உனக்கு சரியான வேலை'' என்று கூற, விளாடிமிரும் அவ்வாறே செய்ய ஒப்புக் கொண்டான். அந்த வேலை விளாடிமிருக்கு மிகவும் பிடித்து விட்டது.

ஒரு நாள் நண்பகல் நேரம் காட்டில் ஓரிடத்தில் ஒரு பாறையைச் சுற்றிலும் வளர்ந்திருந்த காய்ந்த புதர்களில் தீ மூண்டு எரிவதையும், பாறையின் மேல் அமர்ந்த பல்லி ஒன்று வெளியேற முடியாமல் தவிப்பதையும், கண்ட விளாடிமிர் ஒரு நீண்ட குச்சியின் உதவியால் அந்தப் பல்லியை பாறையிலிருந்து வெளியே அகற்றிக் காப்பாற்றினான். அவ்வாறு அவன் காப்பாற்றியவுடன், அந்தப் பல்லி ஒரு கிழவியாக மாறி விளாடிமிருக்கு நன்றி தெரிவித்து, அவனுக்கு ஒரு ஆப்பிள் செடியைத் தந்தாள். ''இதை உன்னுடைய தோட்டத்தில் நடுவாய். வளர்ந்தபின் மரமாகியதும் தரும் ஆப்பிள்கள் பல நோய்களைத் தீர்க்க வல்லது'' என்று கூறிவிட்டு மறுபடியும் பல்லியாக மாறி மறைந்து போனாள்.

விளாடிமிர் அதை எடுத்துச் சென்று, தன் தோட்டத்தில் தன்னுடைய அறையின் ஜன்னலுக்கு அருகில் நட்டு வைத்தான். சில மாதங்களில் வளர்ந்து அது மரமாகி ஆப்பிள்களைத் தந்தது. காய்ச்சலால் பீடிக்கப்பட்டிருந்த தன் தாய்க்கு,



எண்ணினான். ஆனால் அரசனுடைய மருத்துவருக்கு இந்த யோசனை பிடிக்கவில்லை. அதனால் தனது உறவினரான முதல் மந்திரியிடம் அதைத் தடுக்குமாறு கூறினார்.

உடனே முதல் மந்திரியும் அரசனிடம் விளாடிமிரை அரசுப்பணியில் ஈடுபடுத் தாமல் அவனது ஆப்பிள் மரத்தை பிடுங்கி அரண் மனையில் நட்டுவிடலாம் என்று அறிவுரை புகன்றார். அதை அரசனும் ஒப்புக் கொள்ளவே, அரசனின் பணியாளர்கள் திடீரென ஒரு நாள் விளாடிமிரின் தோட்டத்திற்குள் புகுந்து அவன் அனுமதி யின்றியே அந்த ஆப்பிள் மரத்தை வேரோடு பிடுங்கிச் சென்று அரண்மனையில் நட்டு விட்டனர். ஆனால் அரண்மனையில் நட்ட பின்னர் அந்த மரத்தில் ஆப்பிள் உண்டாகவேயில்லை. அரசனுக்கும் இருமல் குணமாகவில்லை.

தனது ஆப்பிள் மரத்தை இழந்த விளாடிமிர் மிகுந்த வருத்தத்துடன் காட்டுக்குச் சென்று, அந்த மாயக் கிழவியை நாடி தியானம் செய்தான். திடீரென காய்ந்த இலைச்சருகுகள் காற்றில் உயரேபறக்க, அவற்றினூடே அந்தக் கிழவி தோன்றினாள். அவளிடம் நடந்த விஷயத்தைக் கூறி விளாடிமிர் வருந்த, அவள் அவனுக்கு ஒரு கூடை நிறைய ஆப்பிள் கொடுத்து, ''இதை அரச

அந்த மரத்தில் விளைந்த முதல் ஆப்பிளை விளாடிமிர் தின்னக் கொடுத்தான். உடனே அவனுடைய தாய் குணமானாள். பிறகு நோய் வாய்ப்பட்டிருந்த பல ஏழைகளுக்கு விளாடிமிர் ஆப்பிள்களைத் தர அவர்கள் அனைவரும் குணமாயினர். இந்தச் செய்தி அந்த நாட்டு அரசனின் செவிகளை எட்டியது.

அரசனுக்குக் கடுமையான ஜலதோசமும், இருமலும் இருந்தன. உடனே அரசன் விளாடிமிர் வீட்டுத் தோட்டத்து ஆப்பிளை உண்டால் தனக்கு நோய் குணமாகும் என்றும், அதற்குப் பாராட்டு தெரிவிக்கும் பெயரில் விளாடிமிரை தன்னிடம் பணியில் அமர்த்தலாம் என்று

சபைக்கு எடுத்துச் சென்று அரசனுக்கும் மற்றவர்களுக்கும் கொடு. பிறகு நடக்கும் வேடிக்கையைப் பார்'' என்று சொல்லி விட்டு மறைந்து போனாள்.

விளாடிமிர் அந்த ஆப்பிள் கூடையை எடுத்துக் கொண்டு அரசனுடைய சபையை அடைந்து மகிமையான ஆப்பிளை அனைவருக்கும் ஆப்பிள் கொத்தான்.

அவ்வாறு அரசன் உட்பட அனைவரும் ஆப்பிளைத் தின்ற உடனே ஒரு அதிசயம் நிகழ்ந்தது. அரசனுடைய மூக்கு திடீரென பெரிதாக வளர்ந்து கழுகு மூக்கைப் போல் மாறிவிட்டது. ''என்ன ஆகி விட்டது எனக்கு?'' என்று பயத்துடன் கத்தினான் அரசன். ''அரசே! இது மகிமை வாய்ந்த ஆப்பிள் என்று சொன்னேன் அல்லவா? உங்கள் அனைவருக்கும் கழுகு மூக்கு உண்டாகிவிட்டது'' என்றான் விளாடிமிர்.

''வேண்டாம், இந்த மூக்கு வேண்டாம். இதை உடனே சரியாக்கு'' என்று அரசன் அலற, மற்றவர்களும் கூக்குரலிட்டனர். ''கவலை வேண்டாம் அரசே! என்னுடைய ஆப்பிள் மரத்தில் விளையும் ஆப்பிள்களை தின்னுங்கள். உங்கள் அனைவரின் மூக்குகளும் சரியாகி விடும். ஆனால் என்னுடைய ஆப்பிள் மரத்தை என்னுடையத் தோட்டத்திலே மீண்டும் நட்டால் தான் அதில் பழங்கள் உண்டாகும்'' என்றான் விளாடிமிர். மன்னன் உத்தரவுப்படி ஆப்பிள் மரம் மீண்டும் விளாடிமிர் வீட்டுத் தோட்டத்தில் நடப்பட்டது.

ஆனால் மீண்டும் அந்த மரத்தில் ஆப்பிள்கள் தோன்ற ஒரு வாரம் பிடித்தது. பிறகு ஒருநாள் தன் மரத்தில் விளைந்த ஆப்பிள்களை எடுத்துச் சென்று, விளாடிமிர் அரசன் உட்பட அனைவருக்கும் அளித்தான். பழைய படி அனைவருக்கும் மனித மூக்கு உண்டானது. அரசனுக்கு நோயும் நீங்கியது. அரசன் விளாடிமிருக்கு தன் அரண்மனையிலேயே வேலை கொடுத்தான். சம்பளம் வாங்காமல் பணி செய்த விளாடிமிர் அந்த நாட்டு மக்கள் நோய் வாய்ப்பட்ட போதெல்லாம் அவர்களுக்குத் தன் மரத்து ஆப்பிள்களைக் கொடுத்து குணமாக்கினான். இவ்வாறு பல காலம் பொது மக்களுக்கு சேவை செய்த விளாடிமிர் இறந்த பிறகு, அந்த ஆப்பிள் மரத்தில் பழங்கள் உண்டாவது நின்று விட்டது.



# செய்திச்சுடர்

## நடனத்தில் ஒரு சாதனை




புதுடெல்லியில் உள்ள ஜவஹர்லால் நேரு அரங்கில், சுமார் நாற்பது இளைஞர்களும், பெண்களும் தொடர்ந்து 55 மணி நேரம் நடனமாடி ஓர் உலக சாதனையை ஏற்படுத்தியுள்ளார்கள். இதற்கு முன் அமெரிக்காவில் கிளீவ்லாந்து மாநிலத்தில் 52 மணி 3 நிமிடங்கள் நேரத்திற்கு ஆடி உண்டாக்கிய சாதனையை இவர்கள் முறியடித்தனர். சொல்லப்போனால் இந்தியா இவ்வாறு சாதனை புரிவது இரண்டாம் முறை. 1999ஆம் ஆண்டு எம் டிவிக்காக, ஹரியானா குர்கான்வ்வில், மாநிலத்தில் 50 மணி நேரம் ஒரு கோஷ்டி நடனம் ஆடி சாதனை புரியப்பட்டது.

## கொலை வழக்கில் துப்புத் துலக்கிய கிளி

உண்மையில் அந்தக்கிளி துப்பறிய வில்லை. ஆனால் ஒரு குற்றவாளியைத் தன் கொலைக்குற்றத்தை ஒப்புக் கொள்ளும்படிச் செய்தது. 27 வயதான மல்லேஷ் வீடுகளுக்கு வெள்ளையடிப்பவன். ஹைதரா பாதில் வசித்து வந்த அவன் ஒரு நாள் துக்காரம் கேட் என்னுமிடத்தில் ஒரு புகழ்பெற்ற கிளி சோதிடரிடம் சென்று சோதிடம் பார்த்தான். கிளி தன்னுடைய கூண்டிலிருந்து வெளியே வந்து ஒரு சீட்டைப் பொறுக்கி எடுத்தது.



அந்த சீட்டில் ''உன் குற்றத்தை உடனே ஒப்புக் கொண்டு விடு; இல்லையேல் உனக்குப் பெரிய ஆபத்து உண்டாகும்'' என்ற வாசகங்கள் காணப்பட்டன. மல்லேஷ் அதிர்ச்சியடைந்தான். தான் மூன்று ஆண்டுகளுக்கு முன் புரிந்த கொலைக்குற்றம் அவன் நினைவுக்கு வந்து அவன் மனசாட்சியை உறுத்தியது. உடனே அருகிலிருந்த காவல் நிலையத்திற்குச் சென்று தன் குற்றத்தை ஒப்புக் கொண்டு சரண் அடைந்தான்.

# சக்தியை

# Energy

# சேமிக்கவும்

## FOR ENERGETIC FUTURE

## சக்தியுள்ள எதிர்காலத்திற்கு






PETROLEUM CONSERVATION RESEARCH ASSOCIATION

www.pcra.org e-mail : pcra@pcra.org

# சக்தியைப் பற்றி ஓர் அறிமுகம்

சக்தி என்பது நமது உலகில் நமக்குக் கிடைத்துள்ள ஓர் அத்தியாவசியமான ஆதாரப் பொருளாகும். நமது நடைமுறை வாழ்க்கையில் ஒரு முக்கிய அங்கம் வகிப்பது சக்தி.

எந்த ஒரு வேலையும் செய்ய நாம் சக்தியைப் பயன்படுத்துகிறோம். நமது வீட்டுக்கும், நாட்டுக்கும் ஒளி தருவது சக்தி. வாகனங்கள், ரயில் வண்டி, ஆகாய விமானம், ஏவுகணை ஆகிய அனைத்தையும் இயக்குவது சக்தி. பகற்பொழுதில் சூரியன் நமக்கு ஒளியைத் தருகிறது. ஈரமான துணிகளை உலரவைப்பது சூரிய ஒளி. தாவரங்கள் வளர்வது சூரிய ஒளியினால்தான். மிருகங்கள் தாவரங்களை உண்ணும்போது அவற்றுள் சேமித்து வைக்கப்பட்டுள்ள சக்தியைப் பெறுகின்றன. இந்த சாகபட்சினி மிருகங்களை, கொடிய மிருகங்களான சிங்கம், புலி ஆகியவை உண்ணும்போது, அவற்றிலுள்ள சக்தியைப் பெறுகின்றன.

நாம் புரியும் செயல்கள் அனைத்தும் சக்தியோடு தொடர்பு உடையனவாக உள்ளன.

எந்த ஒரு வேலையும் செய்வதற்குத் தேவையானதைத் தான் சக்தி என்று சொல்லுகிறோம்.

நாம் உணவு உண்ணும் போது உணவில் உள்ள சக்தியானது நாம் வேலை செய்யத் தேவையான சக்தியாக நம் உடலில் மாற்றம் அடைகிறது. நாம் நடக்கும் போதோ, ஓடும் போதோ, நம் உடலிலுள்ள உணவு சக்தி எரிக்கப்பட்டு வெப்ப சக்தியாக மாறுகிறது. நாம் படிக்கும் போதும், எழுதும் போதும், யோசிக்கும் போதும் கூட, நாம் வேலை செய்வதாகத்தான் பொருள். அதற்கும் உணவு சக்தி தேவை.

வாகனங்கள், ஆகாய விமானங்கள், மின் விளக்குகள், படகுகள், இயந்திரங்கள் ஆகிய யாவுமே சக்தியைப் பயன்படுத்தித்தான் இயங்குகின்றன. எந்த ஒரு செயலுக்கும் இயக்கத்திற்கும் சக்தி தேவை. இந்த சக்தி எங்கிருந்து எவ்வாறு கிடைக்கின்றன தெரியுமா?

- தாவரங்கள் மக்கும் பொருட்களின் சக்தி
- பூவியல் சக்தி
- படிம எரிபொருட்கள்: நிலக்கரி, பெட்ரோல், இயற்கை சக்தி
- நீர்நிலைகளின் இயங்கு சக்தி மற்றும் கடல் நீர் சக்தி
- அணு சக்தி
- சூரிய சக்தி
- காற்று சக்தி

மேற்கூறியவற்றை இந்த சிறு நூலில் விளக்கமாக அறிய முயல்வோம். தவிர சுற்றுச்சூழல் மாசு மற்றும் காரணங்கள், தண்ணீரின் மகத்துவம், வன விலங்குகளின் பராமரிப்பு ஆகியவைப் பற்றியும், நாம் உபயோகிக்கும் சக்தியை சேமிப்பது பற்றியும் விளக்கமாக அறிய முயல்வோம்.

# மக்கும் பொருட்களின் சக்தி



நாம் குப்பை என்று ஒதுக்கும் பொருட்களில் கூட பயனுள்ள சக்தி உள்ளது. வெட்டப்பட்ட மரங்கள், அதன் கிளைகள், வாடிய தாவரங்கள், மக்கிய இலைகள், மரம் அறுப்பதால் கிடைக்கும் மரப்பொடி ஆகிய தாவர இயல் பொருட்களும் மிருகங்கள் பறவைகளின் கழிவுப் பொருட்களும் இவற்றில் அடங்கும். இந்த மக்கும் பொருட்களிலிருந்து வெளிப்படும் எரிவாயு நமக்குத் தேவையான சக்தியை அளிக்கிறது. அதனால் மிருகங்களின் எண்ணிக்கையை அதிகரிக்க வேண்டும். மிருகங்களின் எண்ணிக்கை அதிகரித்தால் ஆடு, மாடு, பன்றி மற்றும் கோழி போன்றவற்றின் கழிவு அதிகரிக்கும். இந்தக் கழிவுப் பொருட்கள் மக்கினால் குப்பையிலிருந்து வெளிப்படுவது போல் மீதேன் வாயு வெளிப்படும். இவற்றை வயல்களில் எரித்து வயலுக்கு உரமாக உபயோகிக்கலாம். மக்கும் பொருட்களின் சக்தியைப் பயன்படுத்துவதால் சுற்றுச்சூழல் சூடாவதில்லை. தாவரங்கள் வளரும் போது கார்பன் டையாக்சைடுவை ($CO_2$) உபயோகித்துக் கொண்டு தக்க வைத்தும் கொள்கிறது. இவை மக்கிப் போன தாவரங்களை எரிக்கையில் வெளிப்படுகின்றது. கார்பன் டையாக்சைடு வாயுவை அதிகமாக உற்பத்தி செய்தால் ''க்ரீன்ஹவுஸ் எஃபக்ட்'' மற்றும் சுற்றச்சூழல் சூடாகாமல் இருக்க பயனுள்ளதாக இருக்கும். மக்கும் பொருட்களின் சக்தி குறைவாகவும் சுத்தீகரிக்கப்பட்டும் உபயோகப்படுத்தப் படுகிறது. அதனால் அவற்றைப் பயன்படுத்து வதால் சுற்றுச்சூழலுக்கு நண்பனாக அமைகிறது.

# சூரிய சக்தி



மனிதன் இந்த பூமியில் பிறந்த நாள் முதல் நாம் சூரியனிலிருந்து வெளிப்படும் சக்தியைப் பயன்படுத்தி வருகிறோம். சூரியன் நமக்கு மிக அருகிலுள்ள ஒரு நட்சத்திரம் என்பதை இன்று நாம் அறிவோம். சூரியன் இல்லாமல் நம் பூமியில் உயிரினம் வாழ முடியாது. சூரிய ஒளியின் சக்தியை நாம்



பலவிதங்களில் ஏற்கெனவே பயன் படுத்துகிறோம். ஈரமான துணிகளை சூரியனுடைய சக்தி உலரச் செய்கிறது. சூரிய ஒளியைக் கொண்டுதான் தாவரங்கள் தங்கள் உணவைத் தயாரிக்கின்றன. மிருகங்கள் இந்தத் தாவரங்களை உண்டு சக்தியைப் பெறுகின்றன. இவ்வாறு பூமியிலுள்ள உயிரினங்களின் சக்திக்கு சூரியனும், மற்ற நட்சத்திரங்களும் இன்றியமையாதவை.



## கடல் நீர் சக்தி

உலகத்திலுள்ள கடல்களிலிருந்து நம் வீடுகளுக்கும், தொழிற்சாலைகளுக்கும் தேவையான சக்தியை பெறலாம். தற்போது கடலிலிருந்து சக்தியை எடுப்பதற்கு வெகு சில பவர் ப்ளாண்ட்களே உள்ளன. அதுவும் மிகச் சிறியதாக உள்ளது. ஆனால் கடலிலிருந்து எவ்வாறு சக்தியைப் பெறுவது? நாம் மூன்று விதங்களில் கடலிலிருந்து சக்தியைப் பெறலாம் :

- கடல் அலைகளின் சக்தியைப் பயன்படுத்தலாம்.
- கடல் நீரின் ஏற்ற இறக்கங்களைப் பயன்படுத்தலாம்.
- கடல் நீரின் வெப்பநிலை வேறுபாடுகளைப் பயன்படுத்தலாம்.

## காற்று சக்தி

வீசும் காற்றின் விசையைப் பயன்படுத்தி, நமக்குத் தேவையான வேலைகளை செய்ய முடியும். காற்றின் சக்தியினால் இயங்கும் பாய்மரக் கப்பல்களைப் பற்றிக் கேள்விப் பட்டிருப்பீர்கள். விசைக் காற்றாடிகள் மூலம் மின்சக்தியை உற்பத்தி செய்ய முடியும். விவசாயிகள் பல ஆண்டுகளாக கிணற்றிலிருந்து தண்ணீரை எடுப்பதற்கு விசைக் காற்றாடிகளை பயன்படுத்தி வருகின்றனர். அப்படிப்பட்ட விசைக் காற்றாடிகளை வலப்புறம் உள்ள படத்தில் காணலாம்.



# நீங்களே செய்து பார்க்கும் செயல்பாடு

***நீங்கள் வீட்டில் இருக்கும் சமயத்திலோ அல்லது பள்ளி, அலுவலகம், நண்பனின் வீடு, திரைப்படம் என்று பல இடங்களுக்குச் செல்லும் சமயத்திலோ, சக்தியை உண்மையாகவே சிக்கனமாகப் பயன்படுத்துகிறீர்களா?***

*உண்மையை அறிய கீழ்க்காணும் கேள்விகளுக்கு* ***'ஆமாம்'*** *அல்லது* ***'இல்லை'*** *என்று பதில் அளியுங்கள்.*

**நான்...**

- தேவைக்கு அதிகமாக மின்விளக்குகளைப் பயன்படுத்துகிறேனா?
- ஓர் அறையை விட்டு சிறிது நேரம் மட்டுமே வெளியில் செல்ல வேண்டியிருந்தாலும் மின்விளக்கை அணைக்காமல் விட்டுச் செல்கிறேனா?
- நான் இருக்கும் அறையின் ஒரு பகுதிக்கு மட்டுமே வெளிச்சம் தேவைப்பட்டாலும் அந்த அறையில் உள்ள எல்லா மின் விளக்குகளையும் இயங்கச் செய்கிறேனா?
- கைகளைக் கழுவும்போது அல்லது பல் துலக்கும் போது, குழாய்த் தண்ணீரை தொடர்ச்சியாகத் திறந்து வைக்கிறேனா?
- தேவைக்கு அதிகமாக அடிக்கடி குளிக்கிறேனா?
- ரசித்து குளிக்க வேண்டும் என்பதற்காக நீண்ட நேரம் குளிக்கிறேனா?
- தேவையில்லாத போதும் சுடுநீரில் குளிக்கிறேனா?
- நல்ல வெயில் அடிக்கும் போதும் கூட ஜன்னல் திரைச்சீலைகளை மூடாமல் இருக்கிறேனா?
- குளிர் சாதனப் பெட்டிகளின் 'தெர்மோஸ்டாட்' கருவியை குறித்த அளவுக்கு அதிகமாகவோ குறைவாகவோ இயக்குகிறேனா?
- பயன்படுத்தாத நிலையிலும் கணினியை இயங்கும் நிலையிலேயே வைக்கிறேனா?
- பார்க்காத அல்லது கேட்காத போது கூட, தொலைக்காட்சிப் பெட்டி வானொலிப் பெட்டிகளை இயங்கும் நிலையிலேயே விட்டுவிடுகிறேனா?
- ''நான் இதற்குப் பணம் கட்டுவதில்லை'' என்று நினைத்து பொது இடங்களில் மின் சக்தியை வீணாக்குகிறேனா?
- சக்தியை வீணாக்குவதால், எனக்கு மட்டுமின்றி என்னுடைய குடும்பத்திற்கும் நாட்டிற்கும் நட்டம் ஏற்படும் என்பதை மறந்து செயற்படுகிறேனா?






## மதிப்பெண்கள்

உங்களுடைய ஒவ்வொரு 'இல்லை' என்ற பதிலுக்கும் ஒரு மதிப்பெண் கொடுங்கள். நீங்கள் பெற்றிருந்த மதிப்பெண்கள்:

| | | |
|---|---|---|
| 10 முதல் 13 | : | சபாஷ்! நீங்கள் உங்கள் வீட்டில் மட்டுமின்றி எங்கிருந்தாலும் சக்தியை சிக்கனமாக செலவழிக்கக் கூடியவர். |
| 7 முதல் 10 | : | எச்சரிக்கை! உங்களுக்கு இன்னும் சற்றுக் கவனம் தேவை. |
| 2 முதல் 6 | : | சுத்த மோசம்! சக்தியையும், பணத்தையும் வீணாக்குகிறீர்கள். நீங்கள் வீணாக்கும் சக்தி மற்றவர்களுக்குப் பயன்படலாம். |

***சக்தியை உங்களுக்காக மட்டும் சேமிக்காதிர்கள்–உலகத்திற்காக சேமியுங்கள்.***

# மாசுபாட்டின் காரணங்கள்

**உலகினைத் தற்போது சூழ்ந்துள்ள அபாயங்களில் தலையாயது சுற்றுச்சூழல் மாசுபடுதலே. பல்லாயிரக்கணக்கான மக்களின் வாழ்க்கையை பாதித்து, பலவித நோய்களையும், நோய்கள் மூலம் இறப்புகளையும் அது உண்டாக்கியுள்ளது.**

*ஒரு இரசாயனப் பொருள் அல்லது இதரப் பொருட்கள் நமக்கு விரும்பத்தகாத பாதிப்பை ஏற்படுத்தும் அளவில் நாம் பயன்படுத்தும் சுற்றுப்புறப் பொருட்களுடன் கலப்பதையே சுற்றுச்சூழல் மாசுபடுதல் என அழைக்கிறோம். இவ்வாறு சுற்றுச்சூழல் மாசுபடுவதற்கான காரணங்களில் சில :*

### 1. காடுகளை அழித்தல்

உலகத்திலுள்ள பல இடங்களில் புதிய உற்பத்திசாலைகள், தொழிற்சாலைகள் ஆகியவற்றை நிறுவுவதற்காக காடுகளில் உள்ள ஏராளமான மரங்களை வெட்டி வீழ்த்துவதாலும், அவற்றுக்கு ஈடு செய்ய புதிய மரங்களை உண்டாக்கத் தவறுவதால் பெரும்பாலான காடுகள் அழிந்து விடுகின்றன. காடுகள் அழிந்து விடுவதால் சுற்றுச் சூழல் மாசு படுகிறது.

### 2. நீர்நிலைகள் மாசுபடுதல்

உற்பத்திசாலைகள், தொழிற்சாலைகள் ஆகியவற்றின் கழிவு நீர் நதிகளிலும் ஏரிகளிலும் கலப்பதால் அவற்றிலுள்ள நீர் மாசு படுகிறது. வளர்ந்து கொண்டிருக்கும்/வளராமல் இருக்கும் நாட்டிலுள்ள மக்கள் ஆற்றில் துணிகளை துவைத்தும், பாத்திரங்கள் கழுவியும், நீராடியும் நீரை மாசு படுத்துகின்றனர். கால்நடைகள் குளிப்பதாலும் தண்ணீர் மாசு படுகிறது.

### 3. ஒலி மாசுபடுதல்

தொழிற்சாலைகளில் உபயோகப் படுத்தப்படும் இயந்திரங்கள் நாள் முழுவதும் உரத்த சத்தம் எழுப்புவதால், அதைச் சுற்றியுள்ள பகுதியின் அமைதி குலைகிறது. இயந்திரங்கள் ஒழுங்காக பழுதுபார்க்கப் படாததாலும் அவை எழுப்பும் ஒலி சுற்றுப்புறத்தை மாசு படுத்துகிறது. இதனால் அப்பகுதியிலுள்ள மக்களின் மனநிலை பாதிக்கப்படுகிறது.

### 4. காற்று மாசுபடுதல்

வளர்ந்த நாடுகளிலுள்ள ஏராளமான தொழிற்சாலைகள் வெளிவிடும் புகையும், வாயுக்களும் காற்று மண்டலத்தை மாசு படுத்துகின்றன. நிலக்கரி அல்லது மற்ற எரிவாயுக்களைப் பயன்படுத்தி மின்சாரம் தயாரிக்கும் அனல் மின் நிலையங்கள் கந்தக வாயுவை உண்டாக்கி காற்றை மாசு படுத்துகின்றன. தற்போது சாலைகளில் மோட்டார் வாகனங்களின் எண்ணிக்கை அதிகரித்து விட்டதால் அவை வெளிவிடும் புகையிலுள்ள கரியமில வாயு ஆகியவையும் காற்று மாசுபடுதலுக்கு முக்கிய காரணங்களில் சில ஆகும்.

### 5. நிலம் மாசுபடுதல்

மனிதர்கள் வாழும் குடியிருப்புகளின் அருகில் குப்பை, பிற அசுத்தப் பொருட்களைக் குவிப்பதே நிலம் மாசுபடுவதற்கு முக்கியக் காரணமாகும். தவிர, உற்பத்திசாலையின் அருகிலுள்ள நிலம் அதிலிருந்து வெளிவரும் கழிவுப் பொருட்களால் பாதிக்கப்படுகிறது. இவ்வாறு பாதிக்கப்பட்ட நிலங்களில் மீண்டும் பயிர் செய்ய முடியாது.

## மாசுபாட்டினால் உண்டாகும் பாதிப்புகள்

நகரத்திலுள்ள காற்றை பெரும்பாலும் சல்ஃபர் டையாக்சைடு ($SO_2$) மற்றும் ஓசோன் வாயு இரண்டும் அதிகமாக மாசுபடுத்துவதாக இருந்தாலும், ஈயம் கலந்த வாயுவும் பெரும்பாலான நகரை மாசுபடுத்திக் கொண்டிருக்கின்றன. சமீபத்திய ஆராய்ச்சியில், தற்போது காற்று மண்டலத்தில் கலந்துள்ள வாயுக்கள் மனித வாழ்வின் நாட்களை குறைக்கும் தன்மை வாய்ந்தது என்று கூறப்பட்டுள்ளது. இவற்றால் சுவாசக் கோளாறு மற்றும் பல நோய்களும் உண்டாகின்றன.

ஒருவருடைய இரத்த அழுத்தத்தையும், மன உளைச்சலையும் அதிகரிக்கச் செய்வதுடன், கேட்கும் திறனையே பாதிக்கும் தீய விளைவுகளை, உரத்த ஒலி உண்டாக்குகிறது. பலத்த சத்தத்தினால் இரண்டு விதமான காது கேளாமை ஏற்படுகிறது. அக்குஸ்டிக் ட்ராமா எனப்படும் காது கேளாமை மிக அதிகமாக ஒலியைக் கேட்டதால், எடுத்துக்காட்டு, பலத்த வெடியால் ஏற்படும். மிதமான ஒலியைத் தொடர்ந்து கேட்டுக் கொண்டே இருந்தால் இன்டியூஸ்டு காது கேளாமை ஏற்படும். இரண்டாவதாக கூறப்பட்டது தான் ஒலி மாசுபடுவதால் அடிக்கடி ஏற்படும் காது கேளாமை ஆகும்.

குடிநீர் மாசுபடுவதால், அவற்றை குடிப்பதற்கோ இதர வேலைகளுக்கோ பயன்படுத்த முடியாது. அது மட்டுமின்றி இவை பலவித நோய்களையும் உண்டாக்கி விடுகிறது.

### மாசுபாட்டினைக் கட்டுப்படுத்துதல்

மாசுபாட்டினால் உண்டாகும் பாதிப்பைப் பற்றி மக்களின் மத்தியில் விழிப்புணர்வை ஏற்படுத்தினால் சுற்றுச்சூழல் மாசுபடுவதைக் கட்டுப்படுத்தலாம். பத்திரிகைகள், தொலைக்காட்சி, வானொலி, சுவரொட்டிகள் கருத்தரங்குகள் ஆகியவற்றின் மூலமாக மாசுபாட்டினால் உண்டாகும் பாதிப்புகளைப் பற்றிய விழிப்புணர்வை மக்களிடையே ஏற்படுத்தலாம்.

நாம் ''மாசுபாட்டினால் உண்டாகும் அபாயங்கள்'' பற்றித் தீவிரமாக சிந்தித்து செயற்பட வேண்டும். இல்லையென்றால் நமது வருங்கால சந்ததியினர் இதனால் உண்டாகும் அபாயங்களால் பாதிக்கப் படலாம்.



# தண்ணீரின் மகத்துவம்



சூரிய மண்டலத்தில் உள்ள கோள்களில் நமது பூமியில் மட்டும்தான் தண்ணீர் உள்ளது. அதுவும் பூமியின் பரப்பில் முக்கால் பாகம் தண்ணீரால் நிரம்பியுள்ளது. இவ்வாறு கடலிலுள்ள தண்ணீர் நீராவியாகி, மேகமாகி மழை பொழிந்து நீரை நமக்கு அளித்துக் கொண்டேயிருக்கிறது. அப்படி யானால் நாம் ஏன் கவலைப்பட வேண்டும் என்கிறீர்களா?

கடல் நீரை நாம் அருந்த முடியாது. ஒரு மனிதனுக்கு மழை நீர் மூலம் சராசரியாகக் கிடைக்க வேண்டிய குடிநீர் நாளுக்கு நாள் குறைந்து கொண்டே வருகிறது. இன்னும் 50 ஆண்டுகளில், பெருகும் மக்கள் தொகையாலும் தட்பவெப்ப நிலை மாறுதல்களினாலும் மூன்றில் ஒரு பாகம் குடி தண்ணீர் மேலும் குறைந்து விடும்.

*தண்ணீரை நீங்கள் எவ்வாறு பாதுகாப்பது?*
*இன்றிலிருந்து அதற்காக நீங்கள் அனைவரும் சிறு முயற்சி எடுத்தாலும், அது காலப்போக்கில் மிகுந்த பயனைத் தரும்.*

## தண்ணீரை சேமிக்க சில எளிய வழிகள்

துளியும் உதவுகிறது

1. கொஞ்சமாகத் தண்ணீர் வரும்படியான குழாய்களையும், ஷவர்களையும், வால்வுகளையும் வீடுகளில் பொருத்துங்கள்.

2. கை கழுவும் போதும், பல் துலக்கும் போதும் சவரம் செய்யும் போதும் பாத்திரங்கள் துலக்கும் போதும் காய்களைக் கழுவும் போதும் குழாயைத் தொடர்ந்து திறந்து வைக்காதீர்கள். குழாய்களுக்குக் கீழே எப்போதும் ஒரு வாளியை வைத்து, அதில் சேரும் நீரை செடிகொடிகளுக்கு நீர் பாய்ச்சப் பயன்படுத்துங்கள்.



3. எப்பொழுதாவது ''நேவி ஷவர்'' செய்யுங்கள். அதாவது கப்பலில் செல்லும் பொழுது அங்கு நல்ல தண்ணீர் கிடைப்பது அரிது. அதனால் கப்பலோட்டிகள் குளிக்கும் போது லேசாக நனைந்தவுடன் குழாயை நிறுத்தி விடுவார்கள். சோப் போட்டு நன்றாக தேய்த்தபின் குழாயை திறப்பார்கள். இவ்வாறு நீங்களும் செய்யலாம்.

4. ஒழுகும் குழாய்களிலிருந்து ஒரு நாளைக்கு சுமார் 15 லிட்டர் வரை வீணாகிறது. ஆகவே குழாய்கள் ஒழுகினால் அவற்றை உடனடியாக பழுது பாருங்கள். கழிப்பறைப் பெட்டியில் உட்புறமாக நீர் ஒழுகுகிறதா என்று அறிய, பெட்டியில் ஏதாவது சாயம் தரும் வண்ணப் பொடிகளைக் கலந்து பதினைந்து நிமிடம் கழித்து மீண்டும் திறந்து பாருங்கள். நீரில் வண்ணச் சாயம் இருந்தால் கழிப்பறைப் பெட்டி ஒழுகுகிறது என்று பொருள்.

தற்போது இருக்கும் தண்ணீருடன் நாம் செலவழிக்கும் தண்ணீரை ஒப்பிட்டுப் பார்த்தால், கூடிய சீக்கிரம் மிக மோசமான தண்ணீர் பற்றாக்குறை வரும் வாய்ப்பு உள்ளது. ஆனால் நீங்களும் உங்கள் குடும்பமும் சேர்ந்து சிறுக சிறுக சேமித்தாலும் கூட நம் வருங்கால சந்ததியினருக்கு போதுமான தண்ணீரை பாதுகாக்கலாம்.



## சுற்றுலாப் பயணம்

நந்திகிராமத்திலுள்ள மகாத்மா ஆரம்பப் பள்ளியில் சக்தி பாதுகாப்பு சங்கம் ஒன்று தொடங்கி உள்ளனர். அதில் நான்கு அங்கத்தினர்கள் உள்ளனர். சுறுசுறுப்பாக செயற்படும் அந்த சங்கத்தின் மேற் பார்வையாளர் டீச்சர் திருமதி நிர்மலா அவர்கள்.

சனிக்கிழமையன்று அவர்கள் ஒரு சுற்றுலாப் பயணம் செல்லத் திட்டமிட்டுள்ளனர். காலை 7.30 மணிக்கு அனைவரும் பள்ளியில் கூடுகின்றனர்.

மகாத்மா ஆரம்பப் பள்ளி

வணக்கம் டீச்சர்!

வணக்கம் குழந்தைகளே!

டீச்சர் தான் கொண்டு வந்திருந்த காரின் பானெட்டைத் திறந்து என்ஜினில் உள்ள ஆயில் மற்றும் ரேடியேட்டரின் தண்ணீர் அளவையும் சரிபார்த்து பிறகு ரேடியேட்டரில் தண்ணீரை நிரப்புகிறார்.

குழந்தைகளே, உங்கள் சாமான்களை டிக்கியில் வையுங்கள்.

பிறகு டீச்சர் காரின் நான்கு சக்கரங்களிலுள்ள காற்றழுத்தத்தை சரிபார்த்து விட்டு ஸ்டெப்னியையும் சோதிக்கிறார்.

மணி எட்டு. டீச்சரும் குழந்தைகளும் காரில் அமர்ந்து பெல்ட் பொருத்திக் கொள்கின்றனர். பிறகு டீச்சர் காரை மெதுவாக அதிக வேகமின்றி ஸ்டார்ட் செய்கிறார். இண்டிகேட்டர் லைட்டுகள் சரியாக வேலை செய்கின்றனவா என்று சரி பார்க்கிறார். பிறகு காரை மெதுவாக செலுத்துகிறார்.

நீங்கள் ஏன் இவ்வளவு மெதுவாக ஓட்டுகிறீர்கள் டீச்சர்? என்னுடைய அப்பா மிக வேகமாக ஓட்டுவார். அதுதான் எனக்குப் பிடிக்கும்

மெதுவாக செலுத்தினால் பத்திரமாக செலுத்தலாம். பெட்ரோலும் குறைவாக செலவாகும். 80 கி.மீ. வேகத்திற்கு பதிலாக 50 கி.மீ வேகத்தில் செலுத்தினால் 40 சதவீதம் பெட்ரோல் மிச்சமாகும்.

அப்படி என்றால் பாது காப்பிற்கு பாதுகாப்பு, பணமும் மிச்சம்.


சாலையில் வேகத்தைக் குறைக்கும் மேடுகள் வரும்போது காரை திடீரென பிரேக் போட்டு வேகத்தைக் குறைக்காமல் தொடக்கத்திலிருந்தே நிதானமாக வேகத்தைக் குறைத்து வந்து, மேடுகளைத் தாண்டுகிறாள்.


என்னுடைய அம்மா கார் ஓட்டினால், திடீரென பிரேக் போட்டு ஒரு குலுக்கலுடன் மேட்டைத் தாண்டுவாள். அது எனக்குப் பிடிக்கும்.


ஜெயா, திடீரென அவ்வாறு பிரேக் பிடித்தால், பிரேக், டயர் இரண்டும் சீக்கிரமே தேய்ந்து போகும். தவிர ஏராளமான சக்தி வெப்பமாக மாறி வீணாகிறது.


அப்படியானால் உங்களைப் போல் ஓட்டினால் பணம் மிச்சம் ஆகும் இல்லையா?


ஆமாம். பிரேக்கை மெதுவாகப் பிடித்தால் பிரேக், டயர் இரண்டும் அதிக நாட்கள் உழைக்கும்.
செல்லும் வழியெல்லாம் டீச்சர் காரை ஒரே சீராக நிதானமாக ஓட்டுகிறாள். பிக்னிக்குக்கான இடம் வந்தவுடன் நிதானமாக காரின் வேகத்தை கியர்களை மாற்றிக் குறைத்து மெதுவாக பிரேக் பிடித்து நிறுத்துகிறாள்


வளைவான பாதையில் கார் திரும்புகிறது. டீச்சர் காரின் வேகத்தை வெகுவாகக் குறைத்து கியர் மாற்றியபின்
அது ஆபத்தானது மட்டுமல்ல. பெட்ரோலும் அதிகமாக செலவாகும். நாம் கார் வாங்கும்போது அதனுடன் கார் செலுத்தும் விதிமுறைகள் பற்றிய குறிப்புப் புத்தகமும் தருவார்கள். அதில் உள்ளபடி குறிப்பிட்ட வேகங்களில் காரை செலுத்த குறிப்பிட்ட கியர்களை மட்டுமே பயன்படுத்த வேண்டும்.


என்னுடைய அம்மாவும் இப்படித்தான் ஓட்டுவாள். ஆனால் சாலையில் கார், பஸ் ஓட்டுபவர்களில் பலர் மிக வேகமாக வளைவுகளில் திருப்புகிறார்களே! அது ஆபத்தானதல்லவா!


குழந்தைகளே, இதோ நாம் வர வேண்டிய இடம்.
பிரமாதம் டீச்சர்! காரை ஒழுங்காக ஓட்டி பெட்ரோலை சிக்கனமாக செலவு செய்யும் விதத்தை எங்களுக்கு காட்டி விட்டீர்கள். உங்களைப் போலவே கார் ஓட்டும்படி எங்கள் பெற்றோரிடம் நாங்கள் சொல்லப் போகிறோம். பெரியவர்களாகி நாங்களே கார் ஓட்டும் போது நீங்கள் சொல்லிக் கொடுத்த விதிமுறைகளைப் பின் பற்றுவோம்.


சபாஷ்! இந்தப் பயணத்தில் பயனுள்ள பல விஷயங்களை நீங்கள் கற்றுக் கொண்டதற்கு மிக்க மகிழ்ச்சி.
ஆமாம் டீச்சர்! அதில் சந்தேகமில்லை!
முடிவுற்றது.

# சக்தியைப் பற்றி ஒரு புதிர்

1. நாம் பயன்படுத்தும் சக்திகளில் அதிக அளவு சக்தியை நமக்குத் தருவது

(அ) சூரியன் (ஆ) காற்று (இ) நிலம் (ஈ) கடல்

2. மின் சக்தியை எதிலிருந்து பெறலாம்?

(அ) இயந்திர சக்தி (ஆ) இரசாயன சக்தி (இ) ஒளி சக்தி (ஈ) மேற்கூறிய அனைத்தும்.

3. எந்த படிம எரிபொருளிலிருந்து கேசொலின் தயாரிக்கப்படுகிறது?

(அ) இயற்கை வாயு (ஆ) நிலக்கரி (இ) பெட்ரோலியம் (ஈ) புரோப்பேன்

4. அணுசக்தி மின் நிலையத்தில் யுரேனியம் அணுக்கள்

(அ) ஒன்றோடு ஒன்று கலந்து வெப்ப சக்தியை உண்டாக்குகிறது.

(ஆ) ஒவ்வொரு அணுவும் சிதைவதால் வெப்ப சக்தி உண்டாகிறது.

(இ) எரிவதால் வெப்ப சக்தி உண்டாகிறது.

(ஈ) சிதைந்து, மின்னணுக்களை உண்டாக்குகிறது.

5. 'நேச்சுரல் கேஸ்' எனப்படும் இயற்கை வாயு எவ்வாறு எடுத்துச் செல்லப்படுகிறது?

(அ) குழாய்கள் மூலம் (ஆ) வாகனங்களில் (இ) பெரிய படகுகளில் (ஈ) மூன்றிலும் சமமாக.

6. வாயு மண்டலத்தின் வெப்ப அதிகரிப்பு எந்த வாயுவினால் முக்கியமாக உண்டாகிறது?

(அ) ஓசோன் (ஆ) கந்தக வாயு (சல்ஃபர் டையாக்சைடு) (இ) கரியமில வாயு (கார்பன் டையாக்சைடு) (ஈ) நைட்ரஸ் ஆக்சைடு

7. சூரியன், மக்கும் பொருட்கள் (Biomass) பூவியல் பொருட்கள் (Geothermal), காற்று, நீர் (Hydro power) ஆகியவற்றிலிருந்த பெறும் சக்தி தொடர்ந்து கிடைத்துக் கொண்டே இருக்கவல்ல சக்தி (Renewable) என்று கூறுவதன் காரணம் என்ன?

(அ) அவை சுத்தமானவை (ஆ) அவற்றை வெப்ப சக்தியாகவும், மின்சக்தியாகவும் எளிதில் மாற்ற முடியும் (இ) இயற்கையால் அவற்றைத் தொடர்ந்து அளிக்க முடியும் (ஈ) காற்று மண்டலத்தை அவை மாசு படுத்துவதில்லை.

8. மின்சாரம் என்பது----------பாய்வதால் உண்டாவது.

(அ) அணுக்கள் (atoms) (ஆ) மூலக்கூறுகள் (molecules) (இ) மின்னணுக்கள் (electrons) (ஈ) நியூட்ரான்கள் (neutrons).

9. நிலக்கரியை எரிப்பதில் கிடைக்கும் வெப்ப சக்தியில், எத்தனை பாகம் மின் சக்தியாக மாறுகிறது?

(அ) மூன்றில் ஒரு பாகம் (ஆ) பாதி (இ) முக்கால் பாகம் (ஈ) பத்தில் ஒன்பது பாகம்.



**விடைகள்:**

1. (அ) ஏனெனில் மற்ற சக்திகளை கொடுக்கும் பொருட்கள் அனைத்தும் சூரியனிடமிருந்தே தோன்றியவை.
2. (ஈ) மூன்றின் மூலமும் மின்சாரம் தயாரிக்க முடியும்.
3. (இ) பெட்ரோலியம்.
4. (ஆ) யுரேனியம் அணுக்கள் சிதைவதால் வெப்ப சக்தி உண்டாகிறது.
5. (அ) குழாய்கள் மூலம்.
6. (இ) கரியமில வாயு (கார்பன் டையாக்சைடு).
7. (இ) இயற்கையால் அவற்றைத் தொடர்ந்து அளிக்க முடியும்.
8. (இ) மின்னணுக்கள் (electrons).
9. (அ) மூன்றில் ஒரு பாகம் அல்லது 33 சதவீதம்.



# பெட்ரோலை சேமிக்க சில யோசனைகள்

கீழ்க்காணும் வழி முறைகளைப் பின்பற்றினால் வாகனங்களை இயக்குகையில் பெட்ரோலையும், பணத்தையும் மிச்சம் பிடிப்பதுடன் சுற்றுச்சூழல் மாசு படுவதையும் தவிர்க்கலாம். இவற்றை சந்தர்ப்ப சூழ்நிலைகளைப் பொறுத்து கடைப் பிடிக்கவும்.

## வாகனம் ஓட்டும் போது

- திடீரென்று வேகத்தை அதிகரிப்பதை தவிர்க்கவும். சீரான வேகத்தில் ஓட்டும் போது பெட்ரோலை குறைவானப் பயன்படுத்தும் என்ஜின் திடீரென வேகத்தை அதிகரித்தால், அதிகமாக பெட்ரோலைப் பயன்படுத்தும் வேகத்தை கொஞ்சம் கொஞ்சமாக அதிகரிக்கவும்.
- திடீரென்று பிரேக் பிடிப்பதைத் தவிர்க்கவும். அந்த மாதிரி சந்தர்ப்பங்களை முன் கூட்டியே எதிர் பார்த்து வேகத்தை மெதுவாகக் குறைத்து மெதுவாக பிரேக் பிடியுங்கள்.
- காரை ஸ்டார்ட் செய்தவுடன், அடுத்த கியருக்கு உடனே மாற்றிவிடுங்கள். கீழ் மட்டத்து கியரை தொடர்ந்து பயன்படுத்தினால், பெட்ரோல் அதிகம் செலவாகும்.
- காரை மெதுவாகவே செலுத்தவும். காரின் வேகத்தை மணிக்கு 55 மைல் வேகத்திலிருந்து 75 மைல் ஆக்கினால், 20 சதவீதம் பெட்ரோல் அதிகமாக செலவாகும் என்று கண்டுபிடிக்கப் பட்டுள்ளது.
- கியர்களை மாற்றும்போது மட்டுமே கிளட்சைப் பயன்படுத்தவும். தேவையில்லாமல் அடிக்கடிப் பயன்படுத்தினால் பெட்ரோல் அதிக செலவு ஆவதுடன் கிளட்சும் தேய்ந்து போகும்.
- நெடுஞ்சாலைகளில் க்ரூஸ் கண்ட்ரோலை உபயோகிக்கவும்.
- ஒரு நிமிடத்திற்கு மேல் நிறுத்த வேண்டும் என்று அறிந்தால் என்ஜினை வீணே ஓட விடாமல் நிறுத்தி விடுவது நல்லது.

## எரிபொருள் பராமரிப்பு யோசனைகள்

- காற்று மற்றும் பெட்ரோல் வடிகட்டிகளை குறிப்பிட்ட கால அளவில் மாற்றிவிடவும். தூசி நிறைந்த சாலைகளில் அடிக்கடி பயணம் செய்ய வேண்டியிருந்தால், அடிக்கடி அவற்றை மாற்றவும்.
- என்ஜினை சீரான நிலையில் இயங்குமாறு வைத்திருக்கவும்.
- "அக்ரெசிவ்" ட்ரெட் டயர்கள் தேவையில்லை என்றால் அதை வாங்காதீர்கள்.
- டயர்களில் காற்றின் அழுத்தத்தை சரியான அளவில் வைத்திருக்கவும்.
- அவசரத்திற்குத் தேவையான பெட்ரோலை, காற்றுப் புகாத ஒரு குடுவையில் நிரப்பி வைக்கவும்.



# சக்தியை சேமிப்பதற்கான காரணங்கள் மற்றும் யோசனைகள்

சக்தியை சிக்கனமாகப் பயன்படுத்துவதற்கு பல காரணங்கள் உள்ளன. அவற்றில் சில:

1. மின்சாரம், கேசொலின், மற்றும் இதர சக்திகளினால் ஆகும் செலவைக் குறைப்பதற்கு
2. படிம எரிபொருட்கள் (எண்ணெய், வாயு, நிலக்கரி) குறைந்து விடாமல் இருப்பதற்கு
3. சக்தியைப் பயன்படுத்துவதால் உண்டாகும் சுற்றுச்சூழல் பாதிப்புகளைக் குறைப்பதற்கு
4. நீங்கள் உபயோகிக்கும் சக்திக்கு நீங்கள் பணம் கட்டவில்லையென்றாலும், அதை வீணாகாமல் பார்த்துக் கொள்வது முக்கியம்.

சிலர் தங்கள் வீட்டில் சக்தியை சிக்கனமாகப் பயன்படுத்திய போதிலும், பொது இடங்களில் அதைக் கடைப் பிடிப்பதில்லை. எப்போதும் எல்லா இடங்களிலும் சக்தியை சிக்கனமாகவே பயன்படுத்த வேண்டும். அதற்கான யோசனைகள் சில :

## மின் விளக்கு

தேவையில்லாத மின் விளக்குகளை அணைத்து விடுவது சக்தியை மிகவும் சிக்கனமாக பயன்படுத்த எளிய வழிமுறையாகும்.

நீங்கள் :



- தேவையில்லாத மின் விளக்குகளை அணைத்து விடுங்கள்.
- குறைந்த வாட்டேஜ் உள்ள விளக்குகளைப் பயன் படுத்துதல் நலம்.
- கூடியவரை இயற்கையான சூரிய ஒளியைப் பயன்படுத்தவும்.
- மின் விளக்குகளை சுத்தமாகத் துடைத்து வைக்கவும்.
- எங்கு வெளிச்சம் தேவையோ அங்கு விளக்குகளை எரிய விடுங்கள்.
- முடிந்தவரை பாதரச ஆவி மின் விளக்குகளைப் பயன்படுத்தவும்.

### உங்களுக்குத் தெரியுமா?

மனிதர்கள் ஓர் ஆண்டில் உபயோகிக்கும் மின்சக்தியை உற்பத்தி செய்யத் தேவையான சக்தியைப் போல் 10,000 மடங்கு சக்தியை சூரியன் அளிக்க வல்லது.

உங்கள் குடியிருப்பில் மின் விளக்குகளைப் பயன்படுத்தும் நபர்களுக்கு நீங்களே அறிவுரை வழங்கலாம். பாதரச ஆவி மின் விளக்குகளையேப் பயன்படுத்த அறிவுரை தரவும். தேவையில்லாத சமயங்களில் அதாவது விடுமுறை நாட்களில், இரவு நேரங்களிலோ அல்லது வேலை எதுவும் நடக்காத போதோ மின் விளக்குகளை இயக்குவதைத் தவிர்க்கவும்.





# வனவிலங்குகளை பாதுகாக்கவும்

வனவிலங்குகளின் இருப்பிடங்கள் அழிவதையும் அவை பூண்டோடு அழிந்துபோவதையும் தவிர்க்க நம்மால் முடியும். இதைப் பற்றிய விழிப்புணர்வை மக்களிடையே ஏற்படுத்த முடியுமானால் வனவிலங்குகள் அழிவதைத் தடுக்க முடியும். அவற்றுக்கான யோசனைகள் சிலவற்றைக் காண்போம்.

## குடியிருப்பு வசதியை ஏற்படுத்தவும்

வனவிலங்குகளுக்கு பத்திரமான குடியிருப்பு வசதியை உண்டாக்க வேண்டும். ஆதி காலத்திலிருந்தே தாவரங்களும், விலங்குகளும் சேர்ந்தே வாழ்ந்து வருகின்றன. மிருகங்களின் இயற்கையான உறைவிடம் காடுகளே. பறவைகள் மரங்களில்தான் தங்கள் கூடுகளைக் கட்டுகின்றன. பட்டுப்பூச்சிகள் பூக்களிலுள்ள தேனை உண்டு உயிர் வாழ்கின்றன. சேற்று நிலங்களும், புதர்களும் கணக்கற்ற உயிரினங்களுக்குப் புகலிடமாக இருந்து வருகின்றன. அவற்றின் இருப்பிடமான காடுகளை மனிதன் அழிக்கத் தொடங்கியதிலிருந்து, அவை இருக்க இடமின்றி, உண்ண உணவின்றி நாளடைவில் பூண்டோடு அழிந்து போகின்றன.
இந்த சூழ்நிலையை நாம் மாற்றி அமைக்கலாம். எப்படி?

- உயிரினங்களைக் கொல்லாமல் இருப்போம்.
- உயிரினங்களுக்காக பாதுகாப்பான சரணாலயங்களை ஏற்படுத்துவோம்.
- நமது குடியிருப்புகளுக்கு அருகிலேயே பறவைகளும் வசிக்குமாறு வசதிகள் செய்வோம்.

## உங்கள் தோட்டத்தை பாதுகாக்கவும்

நமது வீட்டுத் தோட்டத்தில் மரங்களும், செடி கொடிகளும் நிறைந்து இருக்க வேண்டும். அவற்றை நாடி புழுப்பூச்சிகள், பறவைகள், மற்றும் சிறிய மிருகங்கள் தானே வரும். நமக்குப் பிடித்த செடிகளைப் பயிரிடவோ வேறு காரணங்களுக்காகவோ ஏற்கெனவே உள்ள செடி கொடிகளை அழிக்க வேண்டியிருந்தால், அவற்றை முற்றிலும் நீக்காமல் சில மரங்கள், செடி கொடிகள், புதர்கள் ஆகியவற்றை விட்டு விட வேண்டும்.

விசாலமான அடர்ந்து பரந்த ஒரு மரத்தை நம் தோட்டத்திலிருந்து நாம் வீழ்த்தினால் அதை அண்டியுள்ள புழு, பூச்சிகள் வேறிடத்திற்குச் செல்ல வேண்டி வரும். அவற்றையே உணவாகக் கொள்ளும் பறவைகளும் வேறிடத்திற்குச் சென்று விடும். ஆகவே மரங்களை மட்டும் அழிக்கவே கூடாது. விலங்குகள் உலகிற்கு நாம் செய்யும் சிறிய பணி இதுவே.

தோட்டத்து மரங்களிலிருந்து உதிரும் இலை, தழைகளையே உரமாகப் பயன்படுத்தினால் அதுவே அவற்றுக்கும் நல்லது. அவற்றை நாடி வரும் உயிரினங்களுக்கும் நல்லது. செலவும் மிச்சப்படுகிறது. வீணாக ரசாயன உரங்களைப் பயன்படுத்துவதைத் தவிர்க்கவும்.



# புள்ளிகளைச் சேர்க்கவும்

1 முதல் 33 வரை உள்ள புள்ளிகளைச் சேர்த்து மறைந்துள்ள உருவத்தைக் கண்டு பிடிக்கவும்.







# கண்டு பிடியுங்கள்

இந்த இரண்டு படங்களும் பார்ப்பதற்கு ஒரே மாதிரியாக இருந்தாலும், சில வித்தியாசங்கள் உள்ளன. அவற்றைக் கண்டு பிடியுங்கள் பார்க்கலாம்.

# Listen, Enjoy & Learn

about the benefits of

**Oil Conservation & Environment Protection**

## "Boond Boond Ki Baat"




The programme is telecast from 47 other stations in Hindi and regional languages



PETROLEUM CONSERVATION RESEARCH ASSOCIATION
E-mail : pcra@pcra.org
Visit us at : www.pcra.org

# Learn conservation with fun




**Every Sunday on DD-I**

**at 11.00 AM**

(Repeat telecast on Wednesday at 9.00 AM)

*Watch the programme & know all about :*

- Oil Conservation
- Wildlife Preservation
- Significance of Water
- Environment Protection etc.



PETROLEUM CONSERVATION RESEARCH ASSOCIATION
E-mail : pcra@pcra.org
Visit us at : www.pcra.org




**Petroleum Conservation Research Association**
"Sanrakshan Bhavan",10, Bhikaiji Cama Place, New Delhi-110 066
Phone : 26198856 Fax : 26109668

**Northern Region :**
Chief Regional Co-ordinator, "Sanrakshan Bhavan", 10, Bhikaiji Cama Place, New Delhi-100 066. Phone : 26198753, 26182161 Fax : 26109668

**Eastern Region :**
Chief Regional Co-ordinator, Everest House (2nd Floor), 46-C, Chowringhee Road, Kolkata-700 071. Phone : 22887250 / 22881913 Fax : 22880763

**Western Region :**
Chief Regional Co-ordinator, C-5, Keshva Building (Ground Floor),Bandra-Kurla Complex, Bandra East, Mumbai-400 051. Phone : 26592587 / 26592181 Fax : 26590034

**Southern Region :**
Chief Regional Co-ordinator, TMB Mansion (1st Floor),739, Anna Salai, Chennai-600 002. Phone : 28521662 / 28520417 Fax : 28521662



# மாயக்கண்ணாடி

சங்கரன் ஒரு கள்ளம் கபடமற்ற பதினாறு வயது நிரம்பிய பிள்ளை. அவனது மூன்றாவது வயதிலேயே அவனுடைய தாய் இறந்துவிட, அவனுடைய தந்தை சோமன் இளையதாரமாக லட்சுமி என்ற பெண்ணைத் திருமணம் செய்து கொண்டார். அவளுக்கு இரண்டு பிள்ளைகள் பிறந்தன. தன் சொந்தப் பிள்ளைகளிடம் பரிவும் பாசமும் காட்டிய லட்சுமி சங்கரனை இரக்கமின்றி நடத்தினாள்.

இவ்வாறு காலம் சென்று கொண்டிருக்கையில், சோமன் நோய் வாய்ப்பட்டு மோசமான நிலையை அடைந்தான். ஒரு நாள் அவன் தனது இரண்டாவது மனைவியான லட்சுமியிடம் சங்கரனை நல்லபடியாக நடத்துமாறு கூறி உயிர் துறந்தான்.

ஆனால் லட்சுமியின் தீய எண்ணங்கள் மாறவில்லை. ஒருநாள் சங்கரனை அழைத்து, ''சங்கரா, நேற்று என் கனவில் உன்னுடைய அப்பா வந்தார். இதோ இந்த முகம் பார்க்கும் கண்ணாடி மிகவும் மகிமையுள்ளது என்றும், இதை உனக்குக் கொடுக்கும்படியும் கூறினார். இதை உன் தந்தை உனக்குப் பாகம் பிரித்துக் கொடுத்த சொத்தாக நினைத்துக் கொள்'' என்று சாமர்த்தியமாகப் பேசினாள்.

அந்தக் கண்ணாடி சங்கரனுடைய அம்மா கண்டெடுத்த ஒன்று. ஒரு நாள் வயலிலிருந்து வரும் சமயம், ஒரு யோகி வசித்து வந்த இடிந்து கிடந்த அவரது ஆசிரமத்தில் அவளுக்கு அது கிடைத்தது. மகிமையுள்ள கண்ணாடி என்று நம்பிய அவள், அதை சங்கரனுடைய தந்தையிடம் கொடுத்தாள். அதைத் தான் சங்கரனுடைய சித்தி அவனுக்குக் கொடுத்தாள்.

''அப்படியென்றால், நான் உங்களை விட்டுச் சென்று தனியாக

– சாய்ராம் –



இருக்க வேண்டுமா?'' என்று அப்பாவியாகக் கேட்டான் சங்கரன்.

''ஆமாம் சங்கரா! அதுதான் உன் தந்தையின் விருப்பம். இனி நீ எங்காவது சென்று உன் விருப்பப்படி வாழலாம்'' என்று கூறி ஐந்து ரூபாய் மட்டும் கொடுத்து அவனை வீட்டில் இருந்து வெளியேற்றி விட்டாள்.

தன்னுடைய துணிமணிகளை ஒரு பையில் திணித்துக் கொண்ட சங்கரன், அவற்றுள் அந்தக் கண்ணாடியையும் பத்திரமாக செருகிக் கொண்டு, வீட்டை விட்டுக் கிளம்பினான். அந்த ஊர் ராஜா கீர்த்திவர்மரின் அரண்மனைக்குப் பக்கத்தில் உள்ள சத்திரத்தில் தங்கிய சங்கரன் அங்கே உணவருந்திய பின், ஓய்வெடுத்துக் கொண்டே தன் தந்தையின் சொத்தான அந்த முகம் பார்க்கும் கண்ணாடியை எடுத்துப் பார்த்தான். பிறகு மனதுக்குள், 'அப்பா, இது மகிமையுள்ள கண்ணாடி என்று சித்தி சொன்னாள். ஆனால் அந்த மகிமை என்னவென்று தெரியவில்லை' என்று கூறிக் கொண்டு அதை பக்கத்தில் வைத்துக் கொண்டே உறங்கிப் போனான்.

நடு இரவில் திடீரென்று சத்திரத்தில் ஒரே கூச்சலும் குழப்பமும் ஏற்பட்டன. அங்கிருந்தவர்கள் எல்லாரும் பதற்றத்துடன் பேசிக் கொண்டதிலிருந்து பக்கத்து நாட்டு அரசன் நாகவர்மன் திடீரென்று படையெடுத்து வந்து தங்கள் கோட்டையை முற்றுகையிட்டிருக்கிறான் என்று தெரிந்து கொண்டான். சத்திரத்தின் நிர்வாகி, ''மிகவும் தங்கமானவரான நமது மன்னருக்கு இந்தப் போரில் வெற்றி கிட்ட வேண்டும்'' என்று கவலையுடன் கூறினான்.

தனது விலைமதிப்பற்ற சொத்தான அந்தக் கண்ணாடியை கையில் வைத்துக் கொண்டிருந்த சங்கரன் ''நமது மன்னர் இந்தப் போரில் வெற்றி அடைந்தால் மிகவும் மகிழ்ச்சி அடைவேன்'' என்று வாய் விட்டுக் கூறினான். அந்தக் கண்ணாடியிலிருந்து ஒரு மின்னல் மின்னியது. அதனுள்ளிருந்து ஏராளமான பொம்மைகள் போன்ற வீரர்கள் வெளி வந்தனர். வெளியில் வந்தவுடன் அவர்கள் உருவம் பெரிதாகி நிஜமான ஆயுதமேந்திய வீரர்களாகவே மாறினர். அந்த ஆயிரக் கணக்கான வீரர்களும் போர் முழக்கம்

செய்து கொண்டே நாகவர்மனின் வீரர்களை எதிர்த்து சண்டை போட்டனர். பிறகு அந்தக் கண்ணாடி யிலிருந்து ஒரு பெரிய நீளமான கயறு வெளிப்பட்டது. அது நீண்டு கொண்டே போய் எதிரி மன்னன் நாகவர்மனைச் சுற்றிக் கொண்டது.

தன் படை வீரர்களைத் திரட்டி வெளிவந்த மன்னர் கீர்த்திவர்மர், தான் கண்ட காட்சியைக் கண்டு திகைத்தார். ''இது என்ன அதிசயம்?'' என்று கீர்த்திவர்மர் திக்பிரமை அடைந்ததைப் போலவே சங்கரனும் வியப்பின் எல்லைக்கே சென்றிருந் தான். இறுதியில் நடந்திருப்ப தெல்லாம் மாயக்கண்ணாடியின் மகிமையினால் என்றறிந்த கீர்த்தி வர்மர், சங்கரனை அணுகி, மிகவும் மகிழ்ச்சியுடன் நன்றி தெரிவித்த பின், அவனைப் பற்றிய விவரங்களைக் கேட்டார். பிறகு ''உன் சித்தி இதை ஏதோ சாதாரணப் பொருள் என்று கருதி உனக்குக் கொடுத்த இந்தக் கண்ணாடி நம் நாட்டையே பகைவர்களிடமிருந்து காப்பாற்றி விட்டது. உன்னுடைய கள்ளங்கபட மற்ற உள்ளத்தையும் உன்னுடைய தற்போதைய நிலைமையும் நான் புரிந்து கொண்டேன். இனி நீ கவலைப் படத் தேவையில்லை. உனக்கு நல்ல முறையில் கல்வி கற்பித்து உன்னைப் போற்றி வளர்ப்பது இனி என் பொறுப்பு'' என்று கூறி அவனை அணைத்துக் கொண்டார்.

அந்த சமயம் சங்கரன் கையில் இருந்த கண்ணாடி திடீரென அவன் கையை விட்டு மேலே பறந்து போய் உடைந்து தூள் தூளாகியது. அதைக் கண்டு சங்கரன் மிகவும் வருத்த முற்றான். ''கவலைப்படாதே'' என்று அவனைத் தேற்றிய கீர்த்திவர்மர் ''அந்தக் கண்ணாடி தன் கடமையை செய்து விட்டது. நமது முன்னேற்றத் திற்காக இப்படிப்பட்ட மாயமந்திரப் பொருட்களை எப்போதும் நம்பி இருக்கக் கூடாது. நமது உழைப்பும் திறமையுமே நம்மை வழி நடத்திச் செல்லும் '' என்று அறிவுரை கூறியவாறே, அவனைத் தன்னுடன் அழைத்துக் கொண்டு சென்றார்.



சந்தாலி நாட்டுப்புறக் கதை

# மன்னனின் மனதிலுள்ளவை



ஆடுமாடுகள், யானை குதிரைகள், ஒட்டகங்கள் போன்றவற்றை ஏராள மாகக் கொண்ட ஒரு மன்னனுக்குத் திடீரென ஒருநாள் மனதில் ஒரு விஷயம் தோன்றியது. உடனே தன் பணியாளர்கள் அனைவரையும் ஒரு குறிப்பிட்ட நேரத்தில் சபைக்கு அழைத்தான். என்ன விஷயமாகத் தங்களை அழைத்துள்ளார் என்பது யாருக்கும் தெரியவில்லை.

மன்னனும் சபையில் நுழைந்தான். தன் முன்னே அனைவரும் கூடி இருக்கக் கண்டான். இருப்பினும் ''அனைவரும் வந்து விட்டார்களா?'' என்று கேட்டான். சபையில் மௌனம் நிலவியது. ''வராதவர்கள் யாருமில்லை என்று தோன்றுகிறது. இப்போது நான் உங்களை ஒன்று கேட்கப் போகிறேன். உங்கள் ஒவ்வொருவரிடம்இருந்தும் அதற்கான பதிலை எதிர்பார்க்கிறேன்'' என்றான்.

''என் மனதில் என்ன உள்ளது என்று நீங்கள் சரியாகச் சொல்ல வேண்டும். அதற்காகத்தான் உங்கள் அனைவரையும் அழைத்துள்ளேன். எங்கே, ஒவ்வொருவராக முன் வந்து, உங்கள் பதிலைச் சொல்லுங்கள்'' என்றான்.

ஒருவர் பின் ஒருவராக அனைவரும் மன்னன் முன்னால் வந்து நின்று, தனக்குத் தோன்றியதையெல்லாம் சொன்னார்கள். ஆனால் எதுவுமே சரியான பதில் அல்ல என்று மன்னன் மறுத்து விட்டான். மன்னன் முகத்தில் ஏமாற்றம், கோபம், சலிப்பு ஆகிய எந்த உணர்ச்சிகளும் தெரியவில்லை.

இறுதியில் அனைவரையும் அனுப்பி விட்டு, தன் மந்திரியிடம் ''என் மனதிலுள்ளதைக் கண்டு பிடிக்கக் கூடிய ஒரு மனிதனை நம்

நாட்டில் எங்காவது தேடிப்பிடித்து நீங்கள் என்னிடம் அழைத்து வர வேண்டும். ஒரு மாதத்திற்குள் கொண்டு வரத் தவறினால் உங்களைப் பதவியிலிருந்து நீக்கி விடுவேன்'' என்று எச்சரித்து அனுப்பினான்.

அதைக் கேட்ட மந்திரி தன்னுடைய பிரச்சினையை நினைத்துக் கொண்டு குழம்பினான். ''இரவு முழுதும் இதையே நினைத்து உறக்கம் பிடிக்காத மந்திரி, மறுநாள் காலை தெருவில் போவோர் வருவோர் எல்லாரையும் வழிமறித்து தன் பிரச்சினையைக் கூறி, அத்தகைய கெட்டிக்கார மனிதன் யாராவது இருக்கிறானா என்று தீர விசாரித்தான். ஆனால் பயன் எதுவும் கிடைக்க வில்லை. இதுபோல் பல நாட்கள் தேடியும், மந்... தீர்வு காண முடியவில்லை.

மந்திரி ஊன் உறக்கம் அனைத்தும் துறந்து, கவலையே உருவாக மாறினான். அவன் மனைவி அவனைப் பலமுறை உண்ண அழைத்தும், மந்திரி உணவைத் தொடவே மறுத்து, பைத்தியம் போல் திரு திருவென விழித்துக் கொண்டே யிருந்தான். தனது தந்தையின் நிலையைக் கண்ட மகள், ''அப்பா, உங்களை ஏதோ பெரிய பிரச்சினை வாட்டுகிறது என்று தெரிகிறது. அதற்காக நீங்கள் சாப்பிடாமலும், தூங்காமலும் இருந்தால் உடம்பு என்னத்திற்கு ஆகும்?'' என்று கரிசனத்துடன் கேட்டாள். அப்போதும் மந்திரி மௌனம் சாதித்தான். ''அப்பா, அப்படி என்ன தான் பிரச்சினை அது? என்னிடம் சொல்லுங்களேன். ஒருக்கால் என்னால் அதை தீர்க்க முடியலாம்!'' என்றாள். தனது பிரச்சினையை தீர்க்கமுடியும் என்ற சொற்களைக் கேட்டதுமே, மந்திரிக்கு முதன் முறையாக சிறிது நம்பிக்கை ஏற் பட்டது. உடனே தன் பெண்ணிடம் விஷயத்தை விளக்கிக் கூறினான். ''இதற்காகவா இத்தனைக் கவலைப் பட்டீர்கள்? முன்னமே என்னிடம் சொல்லியிருந்தால், அப்போதே இதை தீர்த்திருக்கலாமே!'' என்றவள், ''இன்னும் கெடு முடிய எத்தனை நாள் உள்ளது?'' என்று கேட்டாள். ''இரண்டு அல்லது ஒரு நாள்தான் உள்ளது'' என்றான் மந்திரி.

... அப்படிப்பட்ட ஒரு ம... கொண்டு வருகிறேன்'' என்று ஆழ்ந்த நம்பிக்கையுடன் கூறிய தன் மகளை



மிகுந்த வியப்புடன் மந்திரி நோக்கினான். ''சரி, இப்போது குளித்து விட்டு, நான் சொல்கிற மாதிரி சாப்பிட வாருங்கள்'' என்று மகள் அன்புக் கட்டளையிட, மந்திரியும் கீழ்ப்படிந்தான். உண வருந்திக் கொண்டே மந்திரி தன் மகளை நோக்கி, ''நாளை மறுநாள் நான் அந்த மனிதனை மன்னர் முன் அழைத்துச் செல்ல வேண்டும்'' என்று கூற ''கவலையை விடுங்கள். அவன் உங்களுடன் நாளை மறுநாள் வரும்படி நான் செய்கிறேன்'' என்றாள்.

ஆனால் அவனைத் தேடி அவள் எங்கும் அலைந்து சிரமப்பட வில்லை. அவர்களுடைய ஆடுகளை மேய்க்கும் இளைஞனையே சரியான நபராக மனதினுள் தேர்ந்தெடுத்து விட்டாள். அதிசயம் என்ன வென்றால் அவன் ஒரு பிறவிச் செவிடனும் ஊமையுமாவான். அவனுக்கென்று சொந்தத்தில் மூன்று ஆடுகள் இருந்தன. அவனைத் தன் வீட்டுக்கு அழைத்து வந்து அவனுக்கு வயிறார உணவளித்து தன்னுடைய தந்தையுடன் சென்று மன்னனை சந்திக்க வேண்டும் என்று மட்டுமே சொன்னாள்.



மன்னரிடம் சரியான மனிதனை அழைத்துச் செல்லும் நாளும் வந்தது. ஆனால் ஆடு மேய்க்கும் வாலிபனைத் தன் மகள் அழைத்து வந்திருப்பதைக்கண்ட மந்திரி ''இந்த ஊமைச் செவிடனையா நான் அழைத்துச் செல்ல வேண்டும்?'' என்று கேட்க அவனது மகள் ''ஆமாம்'' என்று வழி அனுப்பினாள்.

தன் மகளுடைய சாமர்த்தியத்தின் மீது அசைக்க முடியாத நம்பிக்கை வைத்திருந்த மந்திரி மறு பேச்சின்றி அந்த வாலிபனை அழைத்துச் சென்று மன்னன் முன்பாக நிறுத்தினான். அதை வேடிக்கைப் பார்க்க சபை முழுதும் மக்கள் கூடிஇருந்தனர்.

சற்று நேரங்கழித்து மன்னனும் சபைக்கு வந்தான். அனைவரும் மன்னனுக்கு வணக்கம் தெரிவித்தனர். அந்த வாலிபனை மேலும் கீழும் உற்றுப் பார்த்த மன்னன் மௌனமாக தன் கையை உயர்த்தி ஒரு விரலைக் காட்டினான். அதற்கு அந்த வாலிபன் பதிலுக்கு இரண்டு விரல்களைக் காட்டினான். புன்னகை புரிந்த மன்னன்,

இப்போது மூன்று விரல்களைக் காட்டினான். தலையை வேகமாக அசைத்த அந்த வாலிபன் மறுபடியும் இரண்டு விரல்களையேக் காட்டினான்.

உடனே மன்னனின் முகம் பூரணமாக மலர்ந்தது. ''சபாஷ், மந்திரியாரே! சரியான ஆளைத் தான் அழைத்து வந்திருக்கிறீர்கள்! நான் கேட்ட கேள்விகளுக் கெல்லாம் இவன் சரியான பதில் கூறி விட்டான்'' என்று பாராட்டிய மன்னனைப் பார்த்து அனைவரும் திகைத்தனர். சபையில் மௌனம் நிலவியது.



''அடடா, உங்களுக்குப் புரிய வில்லையா?'' என்ற மன்னன் ''நானே விளக்குகிறேன். நான் மட்டும் தா[illegible] என்று பொருள்பட ஒரு விரலைக் காட்டினேன். புத்திசாலியான அந்த வாலிபன் மன்னர் கடவுள் என்று இரு தலைவர்கள் உள்ளனர் என்று இரண்டு விரல்களைக் காட்டினான்.

எங்கள் இருவரையும் தவிர அதிகாரம் அதிகமுள்ள மூன்றாவது நபர் யாராவது உள்ளனரா என்று பொருள்பட நான் மூன்று விரல் களைக் காட்டினேன். அதற்கு அந்த அதிபுத்திசாலி, ''இல்லை. இந்த நாட்டின் மீது அதிகாரம் செலுத்த வல்லவர் இறைவனும், நீங்களுமே என்று மீண்டும் இரண்டு விரல் களைக் காட்டினான்'' என்று விளக்கி விட்டு, மந்திரிக்கும், வாலிபனுக்கும் வெகுமதிகள் கொடுத்தான்.

வீட்டுக்குச் சென்றதும், மந்திரி தன் மகளின் உதவியுடன் மன்னரது மனதிலுள்ளதை எவ்வாறு அறிந்தான் என அந்த வாலிபனைக் கேட்க, அவன் தன் சைகைகளால் அவர்களுக்கு விளக்கினான்.

மன்னன் தன்னிடம் அவனுடைய ஒரு ஆட்டை விலைக்குத் தர முடியுமா என்று கேட்டதும், பதிலுக்கு அவன், இரண்டு ஆடுகளை தன்னால் தர முடியும் என்று சைகை காண்பித்தான். ஆனால் அடுத்ததாக மன்னன் தன்னுடைய மூன்று ஆடுகளையும் விலைக்குக் கேட்டதும், இரண்டுக்கு மேல் தன்னால்தர முடியாது என்று சைகை காட்டினான்.

இதைக் கேட்டு, மந்திரியும் மகளும் விழுந்து விழுந்து சிரித்தனர்.



# அநீதி அழியும்

பிரம்மதத்தன் காசியை ஆண்ட போது போதிசத்வர் காசிக்கு அருகே இருந்த ஒரு கிராமத்தில் ஒரு பணக் காரனின் மகனாகப் பிறந்தார். அவர் நன்கு படித்துப் பெரியவரானதும் அவரது பெற்றோர் காசி நகரத்தில் உள்ள ஒருவரது மகளான சுஜாதாவைக் கல்யாணம் செய்து வைத்தார்கள். சுஜாதா மிக மிக அழகானவள். நல்ல புத்திசாலியும் கூட. நற்குணங்கள் படைத்தவள். அவள் தன் கணவன் வீட்டிற்கு வந்து இல்வாழ்க்கை நடத்தி யாவருக்கும் பணிபுரிந்து வந்தாள்.

ஒரு நாள் சுஜாதா தன் கணவரிடம் ''நானும் இங்கு வந்து வெகு காலம் ஆகிவிட்டது. ஒருமுறை காசிக்குப் போய் என் தாய் தந்தையரைப் பார்த்து விட்டு வர எண்ணுகிறேன். நீங்களும் என்னோடு வந்தால் நன்றாக இருக்கும்'' எனக் கூறினாள்.

போதிசத்வரும் ''ஆகா, அப்படியே செய்யலாம். உன் தாய் தந்தையரை நானும் ஒரு முறை பார்த்தது போலவும் இருக்கும்'' எனக் கூறித் தன் மனைவியோடு மறுநாள் வண்டி கட்டிக் கொண்டு காசிக்குக் கிளம்பினார்.

போதிசத்வர் முன் அமர்ந்து வண்டியை ஓட்ட சுஜாதா வண்டிக்குள் உட்கார்ந்து கொண்டு காட்சிகளை ரசித்தவாறே இருந்தாள். வண்டியும் காசி நகர எல்லையை வந்தடைந்தது. அங்கே ஒரு குளத்தருகே போதிசத்வர் வண்டியை நிறுத்தினார். சுஜாதாவும் கீழே இறங்கி தான் கட்டி எடுத்து வந்த கட்டு சாத மூட்டையை எடுத்துக் கொண்டு போதிசத்வருடன் குளக்கரைக்குப் போய் அமர்ந்தாள். இருவரும் உணவை உண்டு நீர் பருகிச் சற்று இளைப்பாறி விட்டு பிறகு வண்டியில் அமர்ந்து காசி நகருக்குள் செல்லலாயினர்.

அப்போது காசி மன்னன் யானை மீது அமர்ந்து பவனி வந்து

கொண்டிருந்தான். மக்கள் கூட்ட மாகக் கூடி வேடிக்கை பார்த்து கொண்டிருந்தனர். சுஜாதாவும் தானும் சற்று வேடிக்கை பார்த்து விட்டு வருவதாக தன் கணவரிடம் கூறி அவரது அனுமதி பெற்று கீழே இறங்கி ஒரு ஓரமாக நின்றாள்.

வண்டியிலுள்ள போதே காசி மன்னன் சுஜாதாவைப் பார்த்து அவளது அழகில் மயங்கி விட்டான். அவளை அடைந்து விடுவது என எண்ணிய போது அவள் விவாக மானவள் என்றும் அவளது கணவன் வண்டியிலுள்ள போதிசத்வர் என்பதும் அவனுக்குத் தெரிந்து விட்டது.

போதிசத்வரை எப்படியாவது ஒழித்து விட்டால் அந்த அழகிய பெண் தன்னோடு இருந்து விடுவாள் என அவன் எண்ணி அதற்கு என்ன வழி என்று யோசிக்கலானான். சட்டென ஒரு வழி அவனுக்குப் புலப் பட்டது. அவன் தன் நம்பிக்கைக்குப் பாத்திரமான ஒரு வேலையாளை அழைத்து தன் தலையிலிருந்து கிரீடத்தை எடுத்து அவனிடம் கொடுத்து ''நீ இதை அதோ தெரியும் வண்டியில் யாருக்கும் தெரியாமல் வைத்து விட்டு வா'' எனக் கூறி போதிசத்வரின் வண்டியைக் காட்டி அனுப்பினான்.

அந்த வேலையாளும் போதிசத்வர் பாராது இருந்த சமயத்தில் அரசனது கிரீடத்தை அவரது வண்டிக்குள் வைத்து விட்டான். இதற்குள் சுஜாதா அரசன் தன்னையே உற்று உற்றுப் பார்ப்பதைக் கண்டு வெட்கப்பட்டு தலையைத் திருப்பிக் கொண்டாள்.



சற்று நேரத்திற்கெல்லாம் அரசாங்க வீரன் ஒருவன் ''யாரும் இருந்த இடத்தை விட்டு நகராதீர்கள் நம் அரசரின் கிரீடம் திருடுபோய் விட்டது. எல்லாரையும் சோதனை போடப் போகிறோம்'' என அறிவித்தான். வீரர்கள் பலர் சோதனையைப் போட்டனர். ஒரு வீரன் போதிசத்வரின் வண்டியைச் சோதனை போட்டு அதில் முன்பே ஒளித்து வைக்கப்பட்டிருந்த கிரீடத்தை எடுத்து ''இதோ திருடன். கிரீடம் அகப்பட்டு விட்டது'' எனக் கத்தினான். அரசனும் போதிசத்வர் தான் திருடன் எனக் கூறி அவரது தலையை வெட்டி எறியுமாறு தண்டனை அளித்தான்.

வீரர்கள் போதிசத்வரைப் பிடித்து சவுக்கால் அடித்து பல தெருக்கள்

வழியாக அழைத்துக் கொண்டு கொலைக்களத்திற்குக் கொண்டு போகலாயினர். இதைக்கண்ட சுஜாதா அவர் பின்னாலேயே ஓடிக் கண்ணீர் வடித்தவாறே ''ஐயோ! நீங்கள் இப்படி அவமானப்பட நான்தான் காரணம். இது எனக்குத் தெரிந்து விட்டது. இந்த அநீதி அடுக்குமா? கடவுளே! என் முறையீட்டைக் கேளாயோ'' எனக் கதறினாள். சுஜாதாவின் இந்தப் புலம்பல் தேவ லோகத்தையே ஆட்டி உலுக்கியது. தேவேந்திரனும் அதன் காரணத்தைப் புரிந்து கொண்டு தன் சக்தியால் போதிசத்வரை அரசன் இருந்த இடத்தில் அவனது ஆடையிலும் காசி மன்னனை போதிசத்வர் இருந்த இடத்தில் அவரது ஆடைகளை அணிந்து இருக்கும்படியும் மாற்றம் செய்து விட்டான்.

வீரர்களுக்குத் தாம் பிடித்துச் செல்வது தம் மன்னனைத்தான் என்பது தெரியவில்லை. கொலைக் களத்தில் அரசனின் தலை துண்டிக்கப் பட்ட போதுதான் உண்மை தெரிந்தது. மன்னனின் ஆடைகள் திரும்ப அவனது உடலுக்கு வந்தன. போதிசத்வரின் ஆடைகள் அவரிடமே போய் விட்டன. தம் கொடுங்கோல் மன்னன் ஒழிந்தான் என்பது கண்டு காசி மக்கள் மகிழ்ந்து போய் ஆரவாரம் செய்தனர். இதற்குக் காரணமான போதிசத்வரைக் காண எல்லாரும் கூடி விட்டனர்.

அப்போது தேவேந்திரன் அவர்கள் முன் தோன்றி நடந்ததை எல்லாம் கூறி காசி மன்னன் தன் கெட்ட எண்ணத் தாலேயே அழிந்தான் என்றும் இனி காசியை போதிசத்வரே ஆண்டு வருவார் என்றும் சுஜாதா அவரது பட்டத்து ராணியாக இருப்பாள் எனவும் கூறி எல்லாரையும் ஆசீர்வதித்து விட்டு மறைந்தான்.

மக்களும் போதிசத்வரைத் தம் மன்னராக ஏற்று அவரது ஆட்சியில் சுக வாழ்வு வாழ்ந்தனர். போதி சத்வரும் சுஜாதாவுடன் சிம்மாசனத் தில் அமர்ந்து நெடுங்காலம் ஆட்சி புரிந்து மக்களை சுகமாக இருக்கச் செய்தார்.





# மகாவிஷ்ணு

**வி**பீஷணனும் இராவணனின் மனைவி மண்டோதரியும் கூறிய அறிவுரைகள் இராவணனின் காதில் ஏறவே இல்லை. சூர்ப்பணகைக்கு மானபங்கம் என்ற காரணத்திற்காக ஒருவரது மனைவியையே கவர்ந்து வந்து சிறைப்படுத்தியது எவ்வளவு கீழ்த்தரமான செயல் என்று அவர்கள் கூறினார்கள்.

ஆனால் இராவணனோ ''இதெல்லாம் சொல்லிப் பயன் இல்லை. நான் ஒன்றும் இராமனிடம் சீதையை ஒப்படைத்து மன்னிப்பு கேட்கப் போவதில்லை. அவனால் ஆனதை செய்யட்டும்'' என்றான்.

இராமரின் வானரப் படைத் திரண்டு வந்தது. சுக்ரீவன், நீலன், அங்கதன், சுஷேணன், ஜாம்பவான் போன்ற மாவீரர்கள் இராமனின் படைத் தலைவர்களாக இருந்தனர். அனுமார் இராமரின் மெய்க் காவலாளி போல எப்போதும் இருந்து வந்தார். வானரர்கள் இலங்கைக்குப் போக பாலம் அமைத்தார்கள். நீலன் தான் இப்பணியினை முடித்தான்.

விபீஷணன் வான வீதி வழியே வந்து இராமரிடம் சரண் புகுந்தான். இராமர் அவனுக்கு அடைக்கலம் அளித்து அவனை இலங்கையின் மன்னனாக ஆக்குவதாக வாக்களித்தார்.

இராமர் வானரப் படைகளோடு இலங்கைக் கடற்கரையில் முகா மிட்டார். இலங்காபுரி உயரமான மலைச் சிகரத்தின் மீது நிர்மாணிக்கப் பட்டிருந்தது.

அங்கிருந்தபடியே இராவணன் இராமர் படைகள் முகாமிட்ட இடத்தைப் பார்த்தான். எங்கு



பார்த்தாலும் எறும்புகள் போல சாரை சாரையாக வானரங்கள் இருந்தன. அங்கதன் வான வீதி வழியே சென்று இராவணனின் முன் நின்றான்.

அவன் இராவணனிடம் ''இராவணா! உன்னை என் தந்தை பொம்மை போலத் தன் வாலில் கட்டி நான் குழந்தையாக இருந்தபோது என் தொட்டிலுக்கு மேல் ஆட்டி விளையாட்டுக் காட்டினார். நீ என் தந்தை வாலியிடம் நடுநடுங்கியதைப் பல முறைகளில் கண்டு களித்தவன் நான். சிறு வயதிலிருந்தே உன்மீது எனக்கு இரக்கம். அதனால் இப்போது உனக்கு நல்லது சொல்ல வந்தேன். நீ இராமரைப் பகைத்துக் கொள்ளாதே. சீதையை அவரிடம் ஒப்படைத்து விட்டு உன் தவறுதலுக்காக மன்னிப்பைக் கேள்,'' என்றான்.

இராவணனுக்குக் கோபம் வந்து விட்டது. தன் இடைவாளை உருவி அங்கதனைத் தாக்க அவன் முயன்றான். ஆனால் அங்கதன் தன் காலால் அவனது கிரீடத்தைத் தட்டி விட்டு அவனைத் திகைக்குமாறு செய்து விட்டுத் திரும்பி வந்தான்.

வானரப் படை இலங்கையையே அதிரச் செய்தது. இராவணன் தூங்கிக் கொண்டிருந்த தன் தம்பி கும்ப கர்ணனை எழுப்பி அப்படைகளை அழிக்குமாறு கூறினான்.

கும்பகர்ணன் கடுந்தவம் புரிந்தான். அவன் என்றென்றும் அழியாதிருக்க பிரம்மாவிடம் நித்தியத்துவம் வரம் வேண்ட நினைத்தான். அப்போது சரஸ்வதிதேவி அவனது நாக்கில் புகுந்து அவனைக் குளற வைத்து நித்தியத்துவம் என்பதற்கு பதிலாக நித்திரைத்துவம் அதாவது தூங்கும் நிலை வேண்டும் என்று வரம் கேட்க வைத்து விட்டாள். அதன் பலனாக அவன் ஆறுமாத காலம் தூங்கி விட்டு எழுவான். அப்போது அவனுக்கு அகோரப் பசி எடுக்கும். அதனைத் தணிக்க தன் எதிரில் தென்பட்டதை யெல்லாம் சாப்பிட்டு வயிறை நிரப்பிக் கொண்டு மீண்டும் தூங்கப்போய் விடுவான்!

அரைத்தூக்கத்தில் இருந்த கும்பகர்ணன் தன் முன் நின்ற இராவணனுக்குப் புத்திமதிகள் கூறிப்பார்த்தான். இராவணனோ ''நீ போர் புரியப் போகிறாயா அல்லது விபீஷணன் போலத் துரோகம்



செய்யப் போகிறாயா?'' என்று கோபத்தோடு கேட்கவே கும்பகர்ணன் போர் புரியச் சென்றான்.

கும்பகர்ணன் வானரர்களைப் பிடித்து விழுங்கலானான். அது கண்டு இராமரும் இலட்சுமணனும் கடுங் கோபம் கொண்டனர். போர் கடுமை யாக நடந்தது. முடிவில் இராமர் எய்த ஒரு அம்பால் கும்பகர்ணன் மாண்டான்.

இதன் பின் இராட்சசப் படைத் தலைவர்கள் எல்லாம் ஒருவர் பின் ஒருவராகப் போர் புரிந்து இறந்தனர். இராவணணின் மகன் இந்திரஜித் இராமரை எதிர்க்க வந்தான்.

இராவணன் தன் மகன் இராமரை வென்று வெற்றி மாலை சூடி வருவான் என எதிர்பார்த்தான். இந்திரஜித் மாயப் போர் புரிபவன். அவனைக் கொல்லக் கூடியவன் பதிநான்கு ஆண்டுகள் கடுமையாக பிரம்மச்சரிய விரதம் மேற்கொண்டு வாழ்ந்தவனே.

இந்திரஜித் சீதையைப் போன்ற உருவை உண்டாக்கி இராமர் பார்த்துக் கொண்டிருக்க அதனைக் கண்ட துண்டமாக வெட்டினான். இதனால் சீதையே ஒழிந்து விட்டாள் என் இராமர் எண்ண வேண்டும் என்பது அவனது நோக்கம். ஆனால் இலட்சுமணன் அது இந்திரஜித் செய்த மாயாஜால வித்தை என இராமரிடம் கூறிப் போர் களத்தில் அவனை எதிர்க்கச் சென்றான். இது போல இராவணன் இராமனின் உருவைச் செய்து வித்யுத் ஜிஹ்வன் என்பவனிடம் கொடுத்து அதன் தலையை வெட்டி ஈட்டியில் குத்தி உயர்த்திச் சீதைக்குக் காட்டுமாறு சொல்லி அனுப்பினான்.

சீதையோ ''ஏன் இந்த மாயாஜால வித்தை எல்லாம்? இன்னும் சில நாட்களில் இராவணனுடைய தலை தான் உண்மையிலேயே இந்த மாதிரி ஈட்டி முனையில் குத்தி உயர்த்தப்பட இருக்கிறது'' என்று கூறி அவனை அனுப்பினான்.

இந்திரஜித் மேகங்களிடையே மறைந்து இராமர் மீதும் இலட்சு மணன் மீதும் நாகாஸ்திரத்தை எய்தான். அப்போது கருடன் பறந்து வந்து பாம்புகளின் தலைகளை நசுக்கிக் கொன்று பாதுகாத்தான்.

சீதைக்கும் இராமருக்கும் பணி



புரிந்து பதிநான்கு ஆண்டுகள் கடும் பிரம்மச்சரிய விரதத்தைக் கடைபிடித்த இலட்சுமணன் இந்திரஜித்தைக் கொல்லப் போகிறான் என விபீஷணன் கூறினான்.

இந்திரஜித் ஒரு யாகம் செய்து கொண்டிருந்தான். அங்கு இலட்சுமணனும் அனுமாரும் விபீஷணனும் போய் கருப்பு ஆடு ஒன்றை பலி இட்டு அவனது ஹோம குண்டத்தில் போட்டு யாகத்தைப் பாழாக்கினார்கள். அங்கு கடும் போர் மூண்டது. அதில் இலட்சுமணன் இந்திரஜித்தைக் கொன்றான்.

இது கண்டு இராவணன் கோபம் கொண்டு பாதாள இலங்கையின் அதிபதியான மஹிராவணனிடம் இராமனையும் இலட்சுமணனையும் காளிதேவிக்குப் பலியிடும்படிக் கூறினான். தூங்கிக் கொண்டிருந்த இராமரையும் இலட்சுமணனையும் மஹிராவணன் தன் மாயாஜாலத்தால் பொம்மைகளாக்கித் தூக்கிக் கொண்டு பாதாள இலங்கைக்குச் சென்றான். அங்கு காளி கோயிலில் பலி கொடுக்க அவர்களை அவன் தயாராக வைத்திருந்தான்.

அனுமார் பாதாள இலங்கைக்குப் போய் வாசலைக்காக்கும் மத்சவல்லவனுடன் போர் புரியலானார். அப்போது சுவர்ச்சயா தேவி அங்கு வந்து அவர்கள் இருவரும் தந்தையும் மகனுமாக உறவு கொண்டவர்கள் எனக்கூறி சண்டையை நிறுத்தினாள்.

அனுமார் சிறு உருவில் காளி கோயிலுக்குள் சென்றார். அங்குள்ள இராமரையும் இலட்சுமணரையும் விடுவித்து தன் தோள்களில் ஏற்றிக் கொண்டு வெளியே வந்தார். அவர்கள் இருவரும் மஹிராவணனுடன் போர் புரியலானார்கள்.

இராமரைத் தெய்வமாகப் போற்றி வணங்கும் சந்திரசேனையை மஹிராவணன் சிறையில் அடைத்திருந்தான். அவளிடமிருந்து அனுமார் மஹிராவணன் உயிர் நிலை இரகசியத்தை அறிந்து கொண்டார். அதனை அவர் அழிக்கவே மஹிராவணன் இராமரின் அம்பினால் தாக்குண்டு இறந்து போனான்.

இராமர் சந்திரசேனைக்கு தத்துவ போதனை புரிந்து அவள் மறுபிறப்பில் விஷ்ணுவை அடைவாள்

என ஆசீர்வதித்தார். பாதாள இலங்கைக்கு மத்சவல்லவனை அதிபதியாக்கி விட்டு இராமரும் இலட்சுமணரும் இலங்கை வந்து சேர்ந்தார்கள்.

தான் செய்த மாயா ஜாலங்கள் எல்லாம் பயனற்றுப் போனது கண்டு இராவணன் தன் கோரிக்கை நிறை வேற பாதாள அறையில் இருந்து யாகம் செய்யலானான். இதை விபீஷணன் இராமரிடம் தெரிவித்து அந்த யாகத்தை அழிக்க வழி கூறினான்.

அங்கதன் மறையும் மந்திரத்தை உச்சரித்து இராவணனின் மாளிகைக்குப் போய் மண்டோதரியின் தலைமயிரைப் பிடித்து இழுத்து வந்து இராவணன் முன் நிறுத்தினான். இதனால் கோபம் கொண்டு இராவணன் எழுந்து வரவே அந்த யாகம் பாதியில் நின்று விட்டது.

வேறு வழியின்றி இராவணன் இராமருடன் போர் புரிய வேண்டியதாயிற்று. தன் மகன் இந்திரஜித்தைக் கொன்ற இலட்சுமணனைக் கண்டதும் அவனுக்கு ஒரே ஆத்திரமாக இருந்தது. அவன் சக்தி ஆயுதத்தை இலட்சுமணன் மீது பிரயோகித்தான். அதனால் இலட்சுமணன் நினைவிழந்து விழுந்துவிட்டான்.

அனுமார் உடனே இமய மலைக்குப் போய் மறுநாள் விடிவதற்குள் அங்கிருந்து சஞ்சீவினி மலையைக் கொண்டு வந்து இலட்சுமணனின் மயக்கத்தைப் போக்கினார். இலட்சுமணன் மயக்கம் தெளிந்து எழுந்ததும் இராமரும் அவனுமாகச் சேர்ந்து



இராவணனை எதிர்த்துப் போரிட லானார்கள்.

இந்திரன் இராமருக்கு உதவ தன் இரதத்தையும் தேரோட்டி மாதலி யையும் அனுப்பினான். இராம ருக்கும் இராவணனுக்குமிடையே கடும் போர் நிகழ்ந்தது. இராமர் இராவணனின் தலை ஒவ்வொன்றாக வெட்டி வீழ்த்தியும் அவை மீண்டும் முளைத்து வந்தது கண்டு திகைத்தார்.

இதை கண்டதும் வீபீஷணன் இராமனிடம் இராவணனின் வயிற்றி லுள்ள அமிர்த பாண்டம் பற்றிக் கூறி அதனை அடித்து உடைக்குமாறு சொன்னான். இராமர் பிரம்மாஸ்திரம் எய்து அதனைச் செய்து இராவணனை ஒழித்தார். இராவணனது உயிரற்ற உடல் கீழே விழுந்தது.

இராவணன் ஒழிந்தான். அதன் பிறகு அவன் தம்பி விபீஷணன் இலங்கையின் மன்னனாக ஆனான்.

சீதை அசோகவனத்திலிருந்து வந்தாள். இராமரும் ''சீதையே! கொடியவனை தண்டித்து நான் நாட்டின் தர்மத்தை நிலை நாட்டி னேன். இராவணன் உன்னைக் கவர்ந்து போய் இவ்வளவு நாட்களாக சிறை வைத்திருந்தான். அதனால் உன்னை நான் எவ்வாறு ஏற்று அயோத்திக்கு செல்ல முடியும்? இனி உன் இஷ்டம் எதுவோ அதன் படி செய்'' என்றார்.

சீதை உடனே அங்கிருந்தவர் களிடம் தீ மூட்டி வளர்க்கும்படிச் சொன்னாள். பின்னர் அவள் இராமரது பாதங்களைத் தொட்டு வணங்கி அந்தத் தீயில் குதித்தாள். தீப் பிழம்புகள் உயரக் கிளம்பின. அத்தீயிலிருந்து அக்னி தேவன் தன் இருகைகளில் சீதையை ஏந்தி வந்து இராமரின் முன் நிறுத்தி ''இராமா! சீதை பரிசுத்தமானவள். ஏற்றுக் கொள்'' என்றான்.

அதே சமயம் தசரதர் சொர்க்கத்தில் இருந்து விமானத்தில் வந்து யாவரையும் பார்த்து அவர் இராமனிடம் ''மகனே! இராமா!! அக்னி பரீட்சையில் சீதை தன் புனிதத் தன்மையை நிரூபித்து விட்டாள். நீ சீதையோடு அயோத்திக்கு சென்று நாட்டை நன்கு ஆண்டு வா'' எனக் கூறினார்.

இராமர் புஷ்பக விமானத்தில் எல்லாரையும் ஏற்றிக் கொண்டு அயோத்தி போய்ச் சேர்ந்தார்.






# வாசகர்களுக்கானக் கதைப் போட்டி

## சிறந்த படைப்பிற்குப் பரிசு ரூ250.

**கீழ்க்காணும் கதையைப் படியுங்கள்:**



கணபதியும் முருகேசனும் அண்டை வீட்டுக்காரர்கள். கணபதி பணக்காரன். ஆனால் முருகேசன் ஏழை. முருகேசனுக்கு நான்கு பிள்ளைகள் உண்டு. அவர்களை அவன் மிக சிரமப்பட்டு வளர்த்தான்.

தனக்கென்று குழந்தைகள் இல்லாத கணபதி, முருகேசனின் பிள்ளைகளில் ஒருவரை தத்து எடுத்துக் கொள்ள விரும்பினான். முருகேசனை அணுகி, அவனிடம் தன் விருப்பத்தை வெளியிட்டான்.

ஆனால் முருகேசன் மௌனமாக இருந்தான். அவனுக்கு இதில் விருப்பமில்லை என்று கணபதிக்குப் புரிந்தது. ''ஏன் உனக்கு சம்மதமில்லையா? உன்னுடைய பிள்ளைகளில் ஒருவனாவது வசதியான வாழ்க்கையை அனுபவிக்கலாம் அல்லவா?'' என்று கேட்டான் கணபதி.

சற்று யோசியுங்கள்.

- முருகேசன் மௌனமாக இருந்தது ஏன்?
- கணபதி அவனை வற்புறுத்தவில்லையா?
- கணபதியின் உண்மையான நோக்கம் என்ன?
- முருகேசனுக்கு பதிலாக அவன் பிள்ளைகளிடமே நேராகப் பேசியிருந்தால், அவர்கள் என்ன சொல்லியிருப்பார்கள்?

உங்கள் விளக்கங்களை 100-150 வார்த்தைகளில் எழுதி ஒரு உறைக்குள் வைத்து அதன் மீது கதைப் போட்டி என எழுதி கீழ்க்காணும் கூப்பனையும் சேர்த்து அனுப்பவும்.

## முடிவு தேதி : பிப்ரவரி 28, 2005

பெயர் ------------------------------------வயது-----------பிறந்த தேதி-----------------

பள்ளியின் பெயர் ----------------------------------------------------------------------

வகுப்பு-------------------------------வீட்டு முகவரி---------------------------------------

-------------------------------------------------------------------------------------------

----------------------------------------------------------------பின்கோடு-------------------

பெற்றோர் கையொப்பம் கலந்து கொள்வோரின் கையொப்பம்

## சந்தமாமா இந்தியா லிமிடெட்

82, டிஃபன்ஸ் ஆஃபீசர்ஸ் காலனி, ஈக்காட்டுத்தாங்கல் சென்னை-600 097.



# ராமநாதனின் சாமர்த்தியம்

மங்காபுரம் கிராமத்தில் ராமநாதன் என்ற வியாபாரி தன் இரு பிள்ளைகளுடன் வசித்து வந்தார். ஒரு காலத்தில் பெரிய செல்வந்தராக இருந்த அவர் வியாபாரத்தில் நட்டம் அடைந்ததால் தன் செல்வத்தையெல்லாம் இழந்தார். ஆனால் இதனால் மனந் தளராத ராமநாதன் தன் இரு மகன்களுடன் சேர்ந்து மீண்டும் மும்முரமாக வியாபாரத்தில் ஈடுபட்டுப் பொருள் சேர்க்கலானார்.

மங்காபுரத்தில் பல பணக்கார வியாபாரிகளும் ஜமீன்தார்களும் வசித்து வந்ததால் அடிக்கடி கொள்ளைக்காரர்கள் அந்த கிராமத்திற்கு வந்து வீடுகளில் கொள்ளையடிப்பதுண்டு. அவர்கள் தாக்குதலை எப்படியோ முன் கூட்டியே அந்த கிராமத்தினர் அறிந்து கொண்டு அவ்வாறு கொள்ளையர்கள் வரும் சமயம் தங்களுடைய உடமைகளை எடுத்துக் கொண்டு பக்கத்து கிராமங்களுக்குத் தலை மறைவாகச் சென்று விடுவதுண்டு.

ஒருமுறை மேற்கூறியவாறு அன்றிரவு கொள்ளைக்காரர்கள் வரப் போவதாக செய்தி கிடைத்தவுடன், அந்த கிராமத்தினர் தங்கள் உடமைகளுடன் தலை மறைவாகி விட்டனர். ஆனால் ராமநாதன் இம்முறை எங்கும் ஓடி ஒளிய விரும்பவில்லை. அவர் தன் பிள்ளைகளிடம் ''நீங்கள் எல்லாரும் பொருட்களை எடுத்துக் கொண்டு ஓடி விடுங்கள். நான் இங்கேயே ஒளிந்து கொள்கிறேன். எனக்கு வேண்டிய உணவுப் பொருட்களை, நமது கொல்லைப்புறம் இருக்கும் வைக்கோல் போரில் ஒளித்து வையுங்கள். நான் எப்படியோ அவற்றைச் சாப்பிட்டு சமாளித்துக் கொள்கிறேன்'' என்றார்.

கொள்ளைக்காரர்கள் இரவில் மங்காபுரத்தில் புகுந்தனர். வீடுகளில் புகுந்து அங்கே கிடைத்தப் பொருட்களை கொள்ளையடித்து அதை மூட்டைகளாகக் கட்டி குதிரைகள் மீது ஏற்றினார்கள். கொள்ளையர்களின் தலைவனின் குதிரையின் முதுகில்

-25 ஆண்டுகளுக்கு முன் அம்புலிமாமாவில் வெளியான கதை-

ஏற்றப்பட்ட மூட்டையில் மட்டும் விலை மதிப்புள்ள ஆபரணங்களும் பணமும் இருந்தன. கொள்ளையர் தலைவன் அங்குமிங்கும் சுற்றிவிட்டுக் கடைசியில் ராமநாதன் வீட்டுக்கு வந்தான். குதிரையை வைக்கோல் போருக்கருகே ஒரு கல்லில் கட்டிவிட்டு தலைவன் ராமநாதன் வீட்டுக்குள் நுழைந்தான். அவர்களது வரவை முன் கூட்டியே அறிந்த ராமநாதன் வைக்கோல் போருக்குள் ஒளிந்து கொண்டிருந்தான். அருகில் கட்டப்பட்டிருந்த தலைவனது குதிரை வைக்கோலை உண்ணும் சத்தம் கேட்டு வைக்கோல் போருக்குள்ளிருந்து ராமநாதன் மெதுவாக வெளியே வந்து குதிரையின் முதுகில் இருந்த மூட்டையை எடுத்து வைக்கோல் போருக்குள் ஒளித்து விட்டு, குதிரையையும் அவிழ்த்து விட்டு விட்டான்.

இதற்குள் ராமநாதனின் வீட்டிலிருந்து வெளியே வந்த தலைவன் தன்னுடைய குதிரை அவிழ்த்துக் கொண்டு வைக்கோல் போரினின்று விலகிப் போய் புல் மேய்வதையும், அதன் முதுகில் இருந்த மூட்டை மறைந்து போனதையும் கண்டு திடுக்கிட்டான். உடனே தன் ஆட்களைக் கூப்பிட்டு விவரத்தைக் கேட்டான்.

உடனே அவனுடைய ஆட்கள் ஒருவர் மற்றொருவரைப் பார்த்து விழித்து விட்டு தங்களுக்குத் தெரியாது என்றனர். பிறகு எல்லாரும் அந்த இடத்தை அலசி ஆராய்ந்தும் அந்த மூட்டை மட்டும் கிடைக்கவில்லை. சலிப்படைந்த கொள்ளையர்கள் அந்தக் கிராமத்தைவிட்டுச் சென்று விட்டனர்.

அவர்கள் கிராமத்தை விட்டுச் சென்றுவிட்ட செய்தி கிடைத்ததும் கிராமத்தினர் மீண்டும் திரும்பி வந்தனர். அதற்குள் ராமநாதன் வைக்கோல்



போரிலிருந்து அந்த மூட்டையுடன் வெளியே வந்து அதைப் பிரித்துப் பார்த்து அதிலிருந்த பணத்தையும் இதரப் பொருட்களையும் கண்டு மகிழ்ந்து அதை ரகசியமாக வீட்டினுள் ஓரிடத்தில் ஒளித்து வைத்தான். வீடு திரும்பிய தன் பிள்ளைகளிடம் கூட இதைப் பற்றி சொல்லவில்லை. தனது பண மூட்டையை கிராமத்திலுள்ள ஒருவன்தான் திருடியிருக்கிறான் என்று சந்தேகித்த தலைவன், அந்த ஒரு வனைக் கண்டு பிடிப்பதற்காகவே, கிராமத்தில் திடீர்ப் பணக்காரர்கள் யாராவது முளைத்துள்ளனரா என்று வேவு பார்க்க வந்திருந்தான்.

ராமநாதனுக்கு கொள்ளையர் தலைவன் தன் வீட்டுக்கும் வேவு பார்க்க வருவான் என்று தோன்றியதால் எச்சரிக்கையுடன் இருந்தான். அவன் எதிர்பார்த்தபடியே ஓரிரவு தனது வீட்டுக்கு வெளிப்புறம் மாறு வேட மணிந்ததலைவன் பதுங்கியிருப்பதைப் பார்த்து விட்டான். தாங்கள் ஏதாவது பேசினால் அதிலிருந்து தன்னுடைய காணாமல் போன மூட்டையைப் பற்றிய விவரங்கள் தெரியலாம் என்ற நம்பிக்கையுடன்தான் அங்கே அவன் பதுங்கியிருக்கிறான் என்று ராமநாதன் புரிந்து கொண்டான். உடனே ராமநாதன் அவன் காதில் விழுமாறு, ''நேற்று நான் நமது வைக்கோல் போரிலிருந்து வைக்கோல் எடுக்கும் போது அதில் பண மூட்டை கிடைத்தது'' என்று கூற ''அது எங்கே இப்போது?'' என்று பிள்ளைகள் கேட்டனர்.

''அதை நான் கிணற்றில் போட்டு விட்டேன். அங்கேயே அது பத்திரமாக இருக்கட்டும்'' என்றான்.

அதைக் கேட்ட கொள்ளையர் தலைவன் மிகுந்த மகிழ்ச்சி அடைந் தான். எல்லாரும் உறங்கிவிட்டார்கள் என நினைத்து, ஒரு கயிற்றின் உதவியால் அவன் கிணற்றுக்குள் இறங்கி, அந்த மூட்டையைத் தேடத் தொடங்கினான். திடீரென ராமநாதன் எழுந்து வந்து அந்தக் கயிற்றை அறுத்துவிட, திருடன் கிணற்றுக்குள் சிக்கிக் கொண்டான். ஒரு பெரிய கல்லைத் தூக்கி எறிந்து, ராமநாதனும் அவன் பிள்ளைகளும் தலைவனைக் கொன்று விட்டனர். இதற்குப் பிறகு தான் ஒளித்து வைத்திருந்த செல்வத்தைக் கொண்டு ராமநாதன் சொகுசான வாழ்க்கை நடத்தினான்.



சாந்திபுரத்தின் அரியணையை அபகரித்த வீரசிம்மன் புரட்சிக்காரர்களை சிறைப் பிடிக்க காட்டுக்குச் செல்கிறான். அங்கு அவனுடைய வீரர்களைத் தாக்க வந்த மிருகங்கள் ஒரு வாலிபன் ஆணையிட, திரும்பிச் செல்கின்றன. அவன் யாராக இருக்கக் கூடும் என்று வீரசிம்மன் யோசிக்கிறான். அதே சமயம், ஜெயநகரத்தில் தோண்டும்போது கிடைத்த ஒரு அம்மனின் விக்கிரகத்துக்கா, ஒரு கோயிலை அமைக்க சுகதேவன் ஆணையிடுகிறான்.

# சூர்யா

வீர இளவரசனின் துணிகரச் செயல்கள்

ஓவியம் : காந்தி அய்யா

சுகதேவன் தன் அரண்மனை நந்தவனத்தில் உலவிக்கொண்டு இருக்கையில், ஒரு வீரன் வருகிறான்.













சுகதேவனுக்கு கோபம் பொங்கி வருகிறது.




அதை நீங்கள் கொடுக்கவில்லை என்றால், எங்கள் ராஜாவின் கட்டளைப்படி...
...அதை பலவந்தமாக நாங்கள் எடுத்துச் செல்வோம்.
அது கனகதுர்கா தேவியின் விக்கிரகம். நாங்கள் அதை இங்கே பிரதிஷ்டை செய்ய கோயில் கட்டிக் கொண்டிருக்கிறோம்.
அந்த விக்கிரகத்தைத் தர முடியாது என்று வீரசிம்மனிடம் சொல்.
அதுதான் உங்கள் பதில் என்றால், அதை சொல்லுங்கள்.
இது ஜெயநகரத்துக்கு நல்லது அல்ல. வரப்போகும் விளைவுகளை சமாளிக்க வேண்டியிருக்கும்.
சாந்திபுரத்தில்....
நம்முடைய கட்டளையை சுகதேவன் மீறுவதா?
ஜபர், ஜெயநகரத்தின் மீது நாம் போர் தொடுக்கலாம்!
ராஜா, முதலில் அந்த விக்கிரகத்தை அவர்கள் வெளியே எடுத்துச் செல்வதைத் தடுக்க வேண்டும்.
சுகதேவனின் மாளிகையை இரண்டு பக்கங்களில் வீரர்கள் சூழ்ந்து கொள்கின்றனர். மூன்றாவது அணி சுகதேவனின் கோட்டை வாயிலுக்குள் நுழையத் தயாராக உள்ளது. ஜபர்சிங் தனது அணி தலைவர்களுடன் ஆலோசனை செய்து கொண்டிருக்கிறான்.
விக்கிரகத்தைக் கைப்பற்றியவுடன், அதைப் படகில் வைத்து எடுத்துச் சென்று விடலாம்.
இது மிகவும் பாதுகாப்பாக இருக்கும். போரைப் பற்றிக் கவலைப் படக்கூடாது.
மகாராஜா, நாம் கோட்டையை எப்போது முற்றுகை இடுவது?
வாருங்கள், ஜெயநகருக்குச் செல்வோம்.



சாந்திபுரத்து வீரர்கள் சுகதேவனின் கோட்டையைச் சூழ்ந்து கொள்கின்றனர்.
சேனாதிபதி, கோட்டையை முற்றுகை இடலாமா?
ஆம். முன்னேறிச் சென்று கோட்டை முன்பு வரிசையாக நில்லுங்கள். யாரேனும் எதிர்ப்பட்டால் போரிடுங்கள்.
ஜபர்சிங் ஒரு அணித்தலைவனுடன் சேர்ந்து கோட்டையை நோக்கி முன்னேறுகிறான்.
சுகதேவனின் காவலாளி ஒருவன் வீரர்கள் முன்னேறி வருவதைக் காண்கிறான்.
வாருங்கள்.
ராஜா! வீரசிம்மனின் வீரர்கள் நம் மாளிகையை முற்றுகை இட்டு உள்ளார்கள்.
செய்யட்டும். நாம் சும்மா இருப்போம்.
மற்றொரு வீரன் வருகிறான்.
படைத் தலைவன் போல் தோற்றமளிக்கும் ஒருவன் நம் மாளிகைக்குள் நுழைகிறான்.
ஜபர்சிங் என்று தோன்றுகிறது. வரட்டும்.
நான் சாந்திபுரத்தின் படைத்தலைவன் ஜபர்சிங். தங்க விக்கிரகத்தை எடுத்துச் செல்ல வந்து இருக்கிறேன்.
அதைத் தர முடியாது என்று நான் உங்கள் தூதுவனிடம் ஏற்கெனவே தெரிவித்து விட்டேனே.
தேவியை பிரதிஷ்டை செய்வதற்காக கோயில் கட்டிக் கொண்டிருக்கிறோம் விரைவிலேயே பூஜை ஆரம்பமாகி விடும்.
பூமியிலிருந்து தோண்டி எடுக்கப்பட்டது ஜெயநகரத்துக்கு சொந்தம் ஆகாது. அது எங்களுக்கே சொந்தம்.
விக்கிரகத்தின் புனிதத்தை நாங்கள் சீர்குலைக்கமாட்டோம். அதற்குரிய இடம் கோயில் தான். பொதுமக்களுக்கு அதனை பூஜிக்கும் உரிமை உண்டு.
விக்கிரகம் எங்கே என்று மட்டும் சொல்லி விடு.

ஜபர்சிங் மிரட்டுகிறான்.




ஜபர்சிங் அணித்தலைவனுக்கு சைகை காட்டுகிறான்.







விக்கிரகத்திலிருந்து வீசும் ஒளியால், அது இருக்கும் இடம் தெரிந்து விடுகிறது. கடைசியில் அது இருக்கும் இடத்தை அடைந்தவுடன் அவர்கள் கண்கள் கூசுகின்றன.



12 X 12 is 144 : Yes, right!



12 X 12 can also be 120!








How's that ?

Take *Junior Chandamama!*
If you buy a copy month after month
you will spend Rs 144 in 12 months.

BUT, if you take out an annual subscription,
you pay only Rs 120 and you get 12 issues!

**This concession is valid upto April 30, 2005**

## New Subscription / Renewal Form

Please enter a one year subscription for ***Junior Chandamama*** in my name ..........................................

..........................................................................

(If renewal, Subscription Number ....................................)

Home address ..........................................................

..........................................................................

..........................................................................

.......................................... PIN CODE ..............................

I am enclosing Bank draft No. ..........................................

on ................................ Bank for Rs. 120 / M.O. Receipt

No. ...................... issued by ..........................................

.......................................................................... Post office.

## GIFT Subscription Form

I wish to give a one-year GIFT Subscription in favour of

Name ..........................................................................

Home address ..........................................................

..........................................................................

.......................................... PIN CODE : ..........................

Please **attach the label** below on the first copy.

I am enclosing Bank Draft No. ..........................................

on .................................................. Bank for Rs. 120

M.O. Receipt No. ...................... issued by ......................

.......................................................................... P.O.

**This is a GIFT Subscription, with love from**

..........................................................................

**Town / City** ..........................................................

## உங்கள் விஞ்ஞானம்

### கணினியின் புத்திசாலித்தனம்

கணித மேதையான ஆலன் எம்.டியூரிங் 1950ஆம் ஆண்டு, என்பவர் கணினியின் புத்திசாலித்தனத்தை சோதிக்க ஓர் ஏற்பாடு செய்தார். ஒரு நபரை ஒரு தனியறையில் இருக்கச் செய்து, அவரை கண்களுக்குத் தெரியாமல் மறைவாக இருக்கும் மற்றொரு மனிதரிடமும் ஒரு கணினியிடமும் கேள்விகள் கேட்கும்படிச் செய்தார்.

கேள்வி கேட்கும் நபருக்குத் தன் எதிரில் மறைவாக இருப்பவர்களில் யார் மனிதர், எது கணினி என்றே தெரியக் கூடாது. ஆனால் இறுதியில் தனக்கு எதிரில் இருப்பனவற்றில் யார் மனிதர், எது கணினி என்று கண்டறிய வேண்டும்.

கேள்வி கேட்கும் நபரால் ஒரு குறிப்பிட்ட நேரத்திற்குள் கண்டு பிடிக்க முடியாவிட்டால், கணினிதான் புத்திசாலி என்று பொருள் படும். ஆனால் இன்று வரை நடத்தப்பட்ட சோதனைகளில், ஒரு கணினிகூடத் தேறவில்லை.



## உங்கள் சுற்றுப்புறம்



### வெந்தயம்

பட்டாணி இனத்தைச் சேர்ந்த வெந்தயம் ஓர் அற்புதமான பொருள். வெந்தயச் செடியில் பூக்கும் வெண்ணிற மலர்கள் காயாகிப் பழுத்து விதைகளைத் தருகின்றன. ஒரு பழத்தில் சுமார் பத்திலிருந்து இருபது விதைகள் வரை இருக்கக் கூடும். காரமான மணமும், கசப்பான சுவையும் கொண்ட இந்த வெந்தய விதைகளில் பல வைட்டமின்களும் தாது உப்புக்களும் உண்டு.

நமது நாட்டுச் சமையலில் வெந்தயம் வெகுவாகப் பயன்படுத்தப்படுகிறது. ஆயுர் வேதத்திலும் இதனுடைய மருத்துவ குணங்களைப் பற்றி சிறப்பாகக் கூறப்படுகிறது.

❖ ரத்தத்திலுள்ள சர்க்கரை அளவைக் கட்டுப்படுத்துவதால், வெந்தயம் நீரிழிவு உள்ளவர்களுக்குப் பெரிதும் பயன்படுகிறது.

❖ இதன் இலைகள் சத்துள்ள உணவாக உண்ணப் படுகின்றன.

❖ வெந்தயத்தை தினசரி சாப்பிட்டால், இரத்த சோகை வராமல் தடுக்கும்

❖ இதன் இலைகளை அரைத்துத் தடவினால், தோலிலுள்ள வீக்கங்கள் குணமாகும்.

# உங்கள் பக்கங்கள் உங்கள் பக்கங்கள்

## உங்களுக்குத் தெரியுமா?

### பென்சிலின் சரித்திரம்

பென்சில் என்ற வார்த்தை 'பென்சிலியஸ்' என்ற இலத்தீன் வார்த்தையிலிருந்து உருவானது. பழங்காலத்தில் ரோமாபுரி மக்கள் பாப்பிரஸ் தாவரங்களின் தண்டு களை எழுதப் பயன் படுத்தி உள்ளனர். முதன் முதலாக கிராஃபைட் குச்சிகளின் மீது நூலைச் சுற்றி பென்சிலாக மக்கள் பயன்



படுத்தினர். அது உடைந்து போவதால் மரத்தாலான குச்சிகளுக்கு இடையில் கிராஃபைட்டைச் செருகி, பென்சிலாகப் பயன்படுத்தினர். இருநூறு ஆண்டுகளுக்கு முன், என்.ஜே.கோண்டே முதன் முதலாக இதைக் கண்டு பிடித்தார். பென்சிலின் எழுதும் முனை கிராஃபைட்டால் செய்யப்பட்டாலும், 'லெட்' (ஈயம்) என்றே கூறுகின்றனர்.

## நம் இந்தியா

சுவாரசியமான, விறுவிறுப்பான இந்திய சரித்திரத்தைப் பற்றி உங்களுக்கு எவ்வளவு தெரியும் என்று கண்டு பிடியுங்கள்:

1. ஒரு சீனப் பயணி நமது இந்தியப் பல்கலைக் கழகங்களில் ஒன்றுக்கு உப அத்தியட்சகர் ஆக நியமிக்கப் பட்டார். அவர் யார்? அந்தப் பல்கலைக்கழகம் எது?





2. விக்கிரம சகாப்தம் எப்போது தொடங்கியது?

3. அசோகருடைய சாசனங்களில் ஒன்று, இரண்டு மொழிகளில் உள்ளது. அது எங்கே உள்ளது? அந்த இரண்டு மொழிகள் யாவை?





4. ராமேஸ்வரத்தில் தனது வெற்றிச் சின்னத்தை நாட்டிய ராஷ்டிரகூட மன்னன் யார்?

(விடைகள் 90ம் பக்கம்)

# போட்டோ வாக்கியப் போட்டி

**இந்த போட்டோக்களுக்கு தொடர்புடையதாக ஒரு சொல்லாகவோ அல்லது சிறு வாக்கியங்களாகவோ எழுதி அனுப்புங்கள்.**



SOURAA



KALANIKETAN BALU

வாக்கியங்களைப் போட்டிக்கென உள்ள தபால் கார்டுகளில் எழுதி, இம்மாதம் 25-ஆம் தேதிக்குள் எமக்குக் கிடைக்குமாறு அனுப்புங்கள். சிறந்த வாக்கியங்களுக்குப் பரிசு ரூ.100/– போட்டி முடிவு ஏப்ரல் 2005 இதழில் வெளியிடப்படும்.

**போட்டோ வாக்கியப் போட்டி, அம்புலிமாமா, 82, டிஃபென்ஸ் ஆஃபீஸர்ஸ் காலனி, ஈக்காட்டுத்தாங்கல், சென்னை – 600 097.**

**வாழ்த்துகள்!**

**பரிசு பெற்றவை**

**டிசம்பர் 2004 இதழில் வெளியிடப்பட்ட போட்டியில் வெற்றி பெற்றவர் :**

**சு. கோமதி**
**இராஜாமணி டெய்லரிங்,**
**தண்ணீர் டேங்க் அருகில்,**
**எளம்பலூர் அஞ்சல்,**
**பெரம்பலூர்.**





"பொழுது போக்கிற்காக"
"பிழைப்பிற்காக"

## நம் இந்தியா - விடைகள் (பக்கம் 89)

1. ஹுவான்–சுவாங், நாலந்தா பல்கலைக் கழகம்.
2. கி.மு.58.
3. காந்தாரம், அரேபிய, கிரேக்க மொழிகள்.
4. கிருஷ்ணா-II.

Printed and Published by B. Viswanatha Reddi at B.N.K. Press Pvt. Ltd., Chennai - 26 on behalf of Chandamama India Limited, No. 82, Defence Officers Colony, Ekkatuthangal, Chennai - 600 097. Editor : B. Viswanatha Reddi (Viswam)

# ஒரிசா
# புத்த மதத்தின் அடிச்சுவடுகள் பதிந்த புண்ணிய பூமி




புத்தரையும், புத்த மதத்தின் அடிச்சுவடுகளையும் அன்றுபோல் இன்றும் தன்னகத்தே தாங்கியுள்ள புண்ணியபூமி ஒரிசா. இங்கு வீசும் காற்றின் ஒவ்வொரு அணுவிலும் புத்த மதத்தின் சாரம் நிறைந்துள்ளது. தயா நதிக்கரையில் கம்பீரமாகத் திகழும், காலத்தால் அழியாத குன்றுகளில் உள்ள கல்வெட்டுகளே அதற்குச் சான்று. பிருபா நதிக்கரையில் அமைந்துள்ள உதயகிரி, லலித்கிரி, ரத்னகிரி ஆகிய மூன்று நகரங்களின் புனித முக்கோண சங்கமத்தில் புத்த மதத்தின் ஜீவஒளி சுடர்விட்டுத் திகழ்வதை இன்றும் காணலாம். சரித்திரத்தின் பல திருப்புமுனைகளை சந்தித்துள்ள லாங்குடி, காயாமா மலைக்குன்றுகள் அவற்றைச் சுற்றி அரவணைத்து நிற்பதைக் காணலாம். புத்த மதத்தின் பெருமைகளை பறைசாற்றும் புத்த விஹாரங்கள், புத்த மடாலயங்கள், பாறையைக் குடைந்து செய்யப்பட்ட குகைகள், அசோகர் காலத்து புராதன கல்வெட்டுகள் இன்னும் ஏராளமான கல்லிலே வடிக்கப்பட்ட கலைச் செல்வங்களைக் கண்குளிர காணலாம்.

காலத்தால் அழியாத புத்த மதத்தின் பழம்பெரும் அடிச்சுவடுகள் பதிந்துள்ள ஒரிசாவிற்கு வாருங்கள்.




**Orissa**
**The Soul of India**

For more information contact: Director, Tourism; Paryatan Bhavan; Bhubaneswar-751014, Orissa, India, Tel: (0674) 2432177, Fax: (0674) 2430887
e.mail:ortour@sancharnet.in, website:www.orissatourism.gov.in
Tourist Offices at; Chennai: Tamilnadu Tourism Complex, Ground Floor Near Kalaivanar Arangam, Wallajah Road , Chennai - 600002, Ph: (044) 25360891
Kolkata: Utkal Bhawan 55, Lenin Sarani, Pin-700013, Tel: (033) 22443653
New Delhi: Utkalika, B/4 Baba Kharak Singh Marg, Pin - 110001, Telefax (011) 23364580




NATURATA

AMBULIMAMA(Tamil) February 2005 Regd No. TN/PMG(CCR)-592/03-05
Regd. with Registrar of Newspaper for India No.1095/57
Licensed to post without prepayment No.377/03-05 Foreigh - WPP.No.378/03-05



# மௌனத்தின் இனிய ஒலி

காது வலியால் சிரமப்படும் வீணாவுக்கு அன்றிரவு உறக்கம் வரவில்லை. இறுதியாக ஒருவாறு அவள் உறங்கத் தொடங்குவதற்குள், பொழுது புலர்கிறது. திடீரென்று காரின் ஹார்ன் சத்தம் காதைத் துளைக்க அவள் திடுக்கிட்டு எழுகிறாள்.

‘‘எழுந்து விட்டாயா வீணா? அது ஒன்றும் இல்லை. நரேஷ்குமார் மாமாவைக் கூட்டிச் செல்ல வந்த கார் டிரைவர் தான் ஹார்ன் அடித்து அவரைக் கூப்பிடுகிறான். அவ்வளவுதான்!’’ என்கிறாள் அவள் அம்மா.

மீண்டும் காதில் வலி ஏற்பட, ‘‘அதற்கு இவ்வளவு சத்தமாக ஹார்ன் அடிக்க வேண்டுமா?’’ என்று வீணா எரிச்சலுடன் கேட்கிறாள்.

‘‘நேரில் வந்து கூப்பிட பொறுமை இல்லாமல் அந்த டிரைவர் இவ்வாறு செய்கிறான். அவனுடைய செய்கையால் சுற்றுச்சூழல் பாதிக்கப்படுவதை அவன் உணரவில்லை’’ என்கிறாள் தாய். அப்போது அங்கு வந்த வீணாவின் தந்தை ‘‘இவ்வாறு உரக்க ஹார்ன் ஒலிக்கச் செய்வது சட்டப்படி குற்றமாகும். பொதுவாக நகரங்களில் வாகனங்கள் எழுப்பும் ஒலி 91 டெசிபல் அளவைத் தாண்டக் கூடாது. தவிர காற்றினால் இயங்கும் ஹார்ன் தடை செய்யப்பட்டுள்ள ஒன்று. ஆனால் பெரும்பாலானோர் சட்டத்திற்குப் புறம்பான செயல்கள் புரிவதால், சுற்றுச்சூழலில் ஒலியின் அளவு அதிகரிக்கிறது’’ என்றார்.

தொடர்ந்து வீணாவின் தாய், ‘‘இவ்வாறு நடப்பதால் காது கேளாமை, இரத்த அழுத்தம், இதய நோய்கள் ஆகியவை உண்டாகின்றன’’ என்றாள்.

‘‘தங்கள் செய்கைகளால் பிறருக்கு ஏற்படும் தீங்குகளைப் புரிந்து கொண்டு ஒவ்வொரு வாகன இயக்குனரும் நடக்க வேண்டும். தனக்கு முன்னால் செல்லும் வாகனத்தை தனக்கு வழிவிடச் செய்வதற்காகத் தொடர்ந்து ஹார்னைப் பயன்படுத்தலைத் தவிர்க்க வேண்டும். நமக்குப் பின்னாலும் பல வாகனங்கள் காத்திருக்கின்றன என்பதை நினைவு கொள்ள வேண்டும்’’ என்றார்.